# அல்லுஃலுவு வல்மர்ஜான்

## ஆழ்கடல் அணிகலன்கள்

நபிமொழித் தொகுப்பு


நூலாசிரியர்: முஹம்மது ஃபுவாத் அப்துல் பாகிஃ

தமிழ் தொகுப்பு : நெல்லை இப்னு கலாம் ரசூல்

இணைய பதிப்பு: ஜாஃபர் அலி



Source: www.islamkalvi.com / www.islamkural.com

E-Book : Sadhath (Email Id : sadhathbai@yahoo.com)

## 1.முன்னுரை

யா அல்லாஹ்! நீயே புகழுக்குரியவன்! உன்னையே நாங்கள் வணங்குகிறோம்! உன்னிடமே உதவியும் தேடுகிறோம்! எங்களை நேரான பாதையில் வழிநடத்துவாயாக! அகிலத்தாருக்கு அருட்கொடையாக வந்த தூதர், உயிரினும் மேலான எங்கள் தலைவர் முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும், அவர்களின் குடும்பத்தார், தோழர்கள் மற்றும் அவர்களின் வழியை பின்பற்றுவோர் அனைவரின் மீதும் உன் அருளை என்றென்றும் பொழிந்திடுவாயாக!

### 1. வேதமும் விரிவுரையும்

மகத்துவமிக்க அல்லாஹ் தன்னை வணங்கி, வழிபடும் நோக்கத்திற்காகத்தான் மனிதர்களையும் ஜின்களையும் படைத்துள்ளான். வாழ்வை வணக்கமாக்கிட மனிதன் கடைபிடிக்க வேண்டிய நெறிகளை வேதங்களின் மூலமும் தூதர்களின் மூலமும் அனைத்துச் சமுதாயத்தினருக்கும் அல்லாஹ் வகுத்தளித்தான். அவ்வழியில் தோன்றிய இறுதி வேதம் அல்குர்ஆன், இறுதித் தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள்.

பாதுகாக்கப்பட்ட வேதத்தின் விரிவுரையாளராக அல்லாஹ் தூதரை அறிமுகப்படுத்தினான்.

وَأَنزَلْنَا إِلَيْكَ الذِّكْرَ لِتُبَيِّنَ لِلنَّاسِ مَا نُزِّلَ إِلَيْهِمْ وَلَعَلَّهُمْ يَتَفَكَّرُونَ

மனிதர்களுக்கு அருளப்பட்டதை நீர் அவர்களுக்கு தெளிவுபடுத்துவதற்காகவும் அவர்கள் சிந்திப்பதற்காகவும் (நபியே!) உமக்கு இவ்வேதத்தை நாம் அருளினோம். (அல்குர்ஆன் 16:44)

வேதவரிகளையும் தூதர் மொழிகளையும் பின்பற்றுவதில்தான் ஈருலக வெற்றி இருக்கிறது என்றும் வேதத்தில் அறிவிப்புச் செய்தான்.

وَالَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ وَآمَنُوا بِمَا نُزِّلَ عَلَىٰ مُحَمَّدٍ وَهُوَ الْحَقُّ مِن رَّبِّهِمْ ۙ كَفَّرَ عَنْهُمْ سَيِّئَاتِهِمْ وَأَصْلَحَ بَالَهُمْ

எவர்கள் ஈமான் கொண்டு, ஸாலிஹான (நல்ல) அமல்கள் செய்து, முஹம்மது மீது இறக்கி அருளப்பட்டதை அது அவர்களுடைய இறைவனிடமிருந்து வந்துள்ள உண்மை என்று நம்பிக்கை கொள்கிறார்களோ, அவர்களுடைய தீமைகளை அவர்களை விட்டும் போக்கி, அவர்களுடைய நிலையையும் (அல்லாஹ்) சீராக்குகின்றான். (அல்குர்ஆன் 47:2)

எனக்கு வஹியாக அறிவிக்கப்பட்டது அல்குர்ஆன் மட்டுமல்ல! நான் கூறும் கட்டளைகளும்தான்! எனவே அல்குர்ஆனுடன் என் கூற்றையும் இணைத்தே பின்பற்ற வேண்டும் என நபி (ஸல்) அவர்களும் வலியுறுத்திக் கூறியுள்ளார்கள்.

عَنْ الْمِقْدَامِ بْنِ مَعْدِيكَرِبَ الْكِنْدِيِّ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ
يُوشِكُ الرَّجُلُ مُتَّكِئًا عَلَى أَرِيكَتِهِ يُحَدَّثُ بِحَدِيثٍ مِنْ حَدِيثِي فَيَقُولُ بَيْنَنَا وَبَيْنَكُمْ كِتَابُ اللَّهِ
فَمَا وَجَدْنَا فِيهِ مِنْ حَلَالٍ اسْتَحْلَلْنَاهُ وَمَا وَجَدْنَا فِيهِ مِنْ حَرَامٍ حَرَّمْنَاهُ أَلَا وَإِنَّ مَا حَرَّمَ رَسُولُ اللَّهِ
صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مِثْلُ مَا حَرَّمَ اللَّهُ

என்னுடைய ஹதீஸ்களில் ஏதேனும் ஒரு ஹதீஸ் அறிவிக்கப்படும். அப்போது ஒருவன் அறியணையில் சாய்ந்தவனாக, நமக்கிடையே அல்லாஹ்வுடைய வேதம் இருக்கிறது, அதில் நாம் காணும் அனுமதியை அனுமதியாக எடுத்துக் கொள்வோம். அதில் நாம் காணும் தடையை விட்டும் தவிர்ந்து கொள்வோம் என்று கூறும் நிலை விரைவில் ஏற்படலாம். அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக அல்லாஹ் தடை செய்துள்ளதைப் போன்று அல்லாஹ்வுடைய தூதரும் தடை செய்துள்ளார்கள்.

(நபிமொழி, அறிவிப்பவர் : மிக்தாம் இப்னு மஃதீ (ரலி) நூல்: இப்னுமாஜா 12)

أَلَا إِنِّي أُوتِيتُ الْكِتَابَ وَمِثْلَهُ مَعَهُ

அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக எனக்கு வேதமும் அதனுடன் அது போன்றதும் (ஹதீஸும்) கொடுக்கப்பட்டுள்ளது. (நபிமொழி, நூல் : அபூதாவூத் 3988)

## 2. நபிமொழிக்காக உழைத்த நல்லோர்

இதற்கு பிறகு வேறு இறைவேதமோ, இறைத் தூதரோ வரப்போவதில்லை, எனவே இதனை மக்களுக்குக் கொண்டு சேர்ப்பது இன்றியமையாத கடமை என்பதை உணர்ந்த மார்க்க அறிஞர்கள் மிகத்துரிதமாக செயலாற்றினர். இப்பணியில் அரபு மக்களுடன் அரபி அல்லாதவர்களும் கைகோர்த்தனர். அரபி அல்லாதவர்களே இதில் முன்னோடிகளாவும் திகழ்ந்துள்ளார்கள். அவர்கள் இப்பணிக்காகவே அரபி மொழியை கற்றார்கள். அதில் பாண்டியத்துவம் பெற்று மார்க்கத் தொன்றாற்றியுள்ளார்கள். இமாம் புகாரீ (ரஹ்) அவர்கள் மற்றும் நம் சமகாலத்தில் வாழ்ந்து மரணித்த ஷைக் முஹம்மது நாஸிருத்தீன் அல்பானி (ரஹ்) ஆகியோர்கூட அரபி அல்லாதவர்களே என்பது குறிப்பிடத்தக்கது.

## 3. பின்னடைவில் தமிழுலகம்

ஏனோ தெரியவில்லை! தமிழக மார்க்க அறிஞர்கள் இம்முயற்சியில் பின்தங்கிவிட்டனர். ஆயிரம் வருடங்களுக்கு முன்பே இஸ்லாம் இந்தியாவின் கடலோரப் பகுதிகளில் குடிபுகுந்தது வரலாற்று கூறும் உண்மை. ஆனால் தமிழ் முஸ்லிம்களுக்கு தாய் மொழியில் அல்குர்ஆன் மொழியாக்கம் கொடுக்கப்பட்டது எப்போது? தமிழுலகில் முதன்முதலாக வெளிவந்த தர்ஜுமத்துல் குர்ஆன் மதிப்பிற்குரிய அறிஞர் அ. கா அப்துல் ஹமீது பாக்கவி அவர்களின் வெளியீடு என்றே கருதுகிறேன். 1943-ல் மொழி பெயர்ப்பு நிறைவு செய்யப்பட்டு, 1949 மே மாதம் முதல் தேதி, 1368 ரஜப் பிறை 2-ம் நாள் அன்று வெளிவந்தது.

(தர்ஜுமத்துல் குர்ஆன், 1978 நான்காம் பதிப்பு, அறிமுக உரையிலிருந்து)
தமிழில் அல்குர்ஆனின் மொழியாக்கம் வெளிவரவே இவ்வளவு கால தாமதம் என்றால், பல கிரந்தங்களில் பதிவு செய்யப்பட்டிருக்கும் இலட்சக் கணக்கான நபிமொழிகள் தமிழ் சமுதாயத்தை முழுமையாக எப்போது வந்த சேரப் போகிறதோ! அல்லாஹ்வுக்குத்தான் தெரியும்!

## 4.அனாச்சார ஊடுருவல்

தமிழக மக்களிடையே மார்க்கத்திற்கு முரணான கொள்கைகள், கோட்பாடுகள், சடங்குகள், சம்பிரதாயங்கள் போன்றவை ஊடுறுவக் காரணமாக இருந்ததும் இந்த மொழியாக்கப் பின்னடைவுதான்! மார்க்கத்தின் மீளுமிடம் அல்குர்ஆனும் சுன்னாவும் என்ற நிலை மாறி, மார்க்கத்தின் மீளுமிடம் மார்க்க

அறிஞர்களானார்கள்?!. அவர்களில் மிகக் குறைந்த எண்ணிக்கையினரைத் தவிர, பெரும்பாலோர் அல்லாஹ்வுடைய அமாநிதத்தை முறையாக மக்களிடம் ஒப்படைக்கத் தவறிவிட்டனர்.
-ஷிர்க்- அல்லாஹ்வுக்கு இணைவைக்கும் கொள்கைகளும் -பித்அத்- மார்க்கத்தின் பெயரால் அரங்கேற்றப்பட்ட நூதனச் செயல்களும் பள்ளியினுள் நிகழ்த்தப்படும் ஜும்ஆ உரையிலும் கலந்திருந்தது. அவர்களின் சில கூற்றுகள் பொதுமக்களின் உள்ளத்தில்கூட நெருடலை ஏற்படுத்தின. இது சரியாகத் தெரியவில்லையே! என்றெல்லாம் நினைத்த பொதுமக்களும் உள்ளனர். ஆனால் அல்குர்ஆனும் ஹதீஸ் நூல்களும் அரபியில் இருப்பதால் மீள்பார்வைக்கு வழியில்லாத பொதுமக்கள் மார்க்க போதகர்களின்?! கையில் சிக்கித் தவித்தனர். இன்றும் அந்நிலை நீடித்துக் கொண்டுதான் இருக்கிறது.

### 5. எழுச்சியை நோக்கி

இருப்பினும் நாம் வாழும் இக்காலகட்டத்தை எழுச்சி காலம் என்றுதான் கூறவேண்டும். பல நூறு வருடங்களாக முடங்கிக் கிடந்த மொழியாக்கப்பணிகள் அல்லாஹ்வின் பெருங்கிருபையால் செயல்படத் துவங்கியுள்ளன. ஸஹீஹுல் புகாரீ, ரியாலுஸ் ஸாலிஹீன் போன்ற ஹதீஸ் நூல்கள் தமிழில் வெளிவந்துள்ளதை இதற்கு உதாரணமாகக் கூறலாம். மார்க்க ஆதார நூல்கள் பொதுமக்களின் கையில் கிடைத்துக் கொண்டிருக்க, மற்றொரு புறம் மார்க்க அறிஞர்களிடமும் மாற்றங்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. இன்று ஜும்ஆ உரைகளிலும் பிற சொற்பொழிவுகளிலும் ஆதாரம் கூறப்படுகிறது. எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அனைவருக்கும் நேர்வழி காட்ட அல்லாஹ் போதுமானவன்.
அல்லாஹ்வின் வேதமான அல்குர்ஆனையும் அதன் விரிவுரையான ஸுன்னாவையும் அதன் தூய வடிவில் மக்களிடம் கொண்டு சேர்ப்பதுதான் சமூக முன்னேற்றத்திற்கும் எழுச்சிக்கும் ஒரே வழி! அவ்வழியில் எங்களையும் இணைத்துக் கொள்வதற்காக தொடங்கியுள்ள சிறு முயற்சிதான் அல்லுஃலுவு வல்மர்ஜான் எனும் ஹதீஸ் நூலின் மொழியாக்கப் பணி.

### இரண்டுவகை ஹதீஸ் தொகுப்புகள் :

**ஹதீஸ் கிரந்தங்களை தொகுப்பின் அடிப்படையில் இரண்டு வகைகளாகப்**

பிரிக்கலாம்.

1 ஸஹிஹுல் புகாரி, ஸஹிஹ் முஸ்லிம், ஜாமிவுத் திர்மிதி, முஸ்னத் அஹ்மத் இன்னும் இதுபோன்ற மூல கிரந்தங்கள்.

2 மூல கிரந்தங்களிலிருந்து தொகுக்கப்பட்ட ரியாலுஸ் ஸாலிஹின், மிஷ்காத்துல் மஸாபிஹ் போன்ற தொகுப்பு நூல்கள்.

இதில் அல்லுஃலுவு வல்மர்ஜான் இரண்டாம் வகையைச் சார்ந்தது. இது ஸஹீஹுல் புகாரீ மற்றும் ஸஹீஹ் முஸ்லிம் ஆகிய இரண்டு நூல்களிலிருந்தும் தொகுக்கப்பட்ட நூலாகும். 54 தலைப்புகளில் பல்வேறு உப தலைப்புகளுடன் இம்மை, மறுமை வெற்றிக்கு அத்தியாவசியமான 1906 நபிமொழிகளை அழகாக தொகுத்து வழங்கியிருக்கிறார் நூலாசிரியர் எகிப்தைச் சார்ந்த முஹம்மது ஃபுவாத் அப்துல் பாகிஃ அவர்கள். அல்லாஹ் அவர்களின் இச்சேவையை ஏற்றுக் கொள்வானாக! மறுமையில் ஜன்னத்துல் ஃபிர்தவ்ஸின் வாரிசுதாரராக்குவானாக! ஆமீன்.

அல்லுஃலுவு வல்மர்ஜான் என்று பெயரிட்டு வழங்கியிருக்கும் இந்நபிமொழிக் களஞ்சியம் உண்மையிலேயே ஆழ்கடல் அணிகலன்களாகிய முத்து பவளங்களைக் காட்டிலும் மிக மிக பெருமதிப்புடையவை. ஏறத்தாழ 70 ஆண்டுகளுக்கு முன்பு ஆசிரியரால் தொகுக்கப்பட்ட இந்நபிமொழிக் களஞ்சியத்தை தமிழில் அறிமுகப் படுத்துவதில் மிக்க மகிழ்வடைகிறோம்.

ஆதாரப் பூர்வமான அனைத்து ஹதீஸ்களும் -அது எந்த கிரந்தத்தில் இடம்பெற்றிருந்தாலும்- ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய, நடைமுறைப்படுத்த வேண்டியவைகளாகும். இருப்பினும் ஸஹீஹான ஹதீஸ்களுக்கு மத்தியில் அவைகளின் தரத்திலும் வலிமையிலும் சில படித்தரங்களை ஹதீஸ்கலை வல்லுனர்கள் ஏற்படுத்தியுள்ளனர்.

ஹதீஸ்கலை வல்லுனர்களில் ஒருவரான இமாம் இப்னு ஸலாஹ்(ரஹ்) அவர்கள் ஸஹீஹான ஹதீஸ்களை ஏழு வகையாகப் பிரித்துள்ளார்கள்.

முதலாம் வகை – புகாரி, முஸ்லிம் ஆகிய இரண்டிலும் இடம் பெற்ற ஹதீஸ்.

இரண்டாம் வகை – புகாரியில் மட்டும் இடம் பெற்ற ஹதீஸ்.

மூன்றாம் வகை – முஸ்லிமில் மட்டும் இடம் பெற்ற ஹதீஸ்.

நான்காம் வகை – புகாரி, முஸ்லிம் இரண்டிலும் இடம் பெறாவிட்டாலும் அவர்கள் இருவரும் கடைபிடிக்கும் நிபந்தனைகளுக்கு உட்பட்ட ஹதீஸ்.

ஐந்தாம் வகை – புகாரியில் இடம் பெறாவிட்டாலும் புகாரியின் நிபந்தனைக்கு உட்பட்ட ஹதீஸ்.

ஆறாம் வகை – முஸ்லிமில் இடம் பெறாவிட்டாலும் முஸ்லிமின் நிபந்தனைக்கு உட்பட்ட ஹதீஸ்.

ஏழாம் வகை – புகாரி, முஸ்லிமில் இடம் பெறாத, இரண்டின் நிபந்தனைகளுக்கும் உட்படாத, பிற ஹதீஸ் கிரந்தங்களில் இடம் பெற்றுள்ள ஸஹிஹான ஹதீஸ்.

**முத்தஃபக்குன் அலைஹி**

ஒரே ஹதீஸ் புகாரீயிலும் முஸ்லிமிலும் இடம் பெற்றிருந்தால் அது ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களின் ஏழு வகைகளில் முதல் தரத்தை அடைகிறது. இவ்வகை ஹதீஸ்களை முத்தஃபக்குன் அலைஹி என ஹதீஸ்கலையில் குறிப்பிடுவர். இது ஆதாரப் பூர்வமான ஹதீஸ் என்பதில் இமாம் புகாரீ அவர்களும் இமாம் முஸ்லிம் அவர்களும் ஒன்றுபட்டுள்ளனர் என்பது அதன் பொருள்.

முத்தஃபக்குன் அலைஹி என்ற ஆதாரப் பூர்வமான நபிமொழிகளில் முதல்தர வகையை உள்ளடக்கிய நபிமொழிக் களஞ்சியம்தான் அல்லுஃலுவு வல்மர்ஜான். அல்லாஹ்வின் அருள்மறை அல்குர்ஆனுக்கு அடுத்த உயர்ந்த தரத்தில் போற்றப்படும் ஸஹீஹுல் புகாரீ, ஸஹீஹ் முஸ்லிம் ஆகிய இரண்டிலும் இடம் பெற்றுள்ள ஹதீஸ்களின் தொகுப்பு நூல்தான் இது.

இந்நூலில் ஸஹீஹுல் புகாரீயின் ஹதீஸ்களின் வாசகங்கள்தான் இடம் பெற்றுள்ளன. அதே ஹதீஸ் ஸஹீஹ் முஸ்லிமில் இடம் பெற்றுள்ள ஹதீஸ் எண்ணை மட்டும் குறிப்பிட்டுள்ளோம். இரண்டு நூல்களிலும் இடம் பெற்ற ஒரே ஹதீஸின் வாசக அமைப்பு சற்று மாறியிருக்கலாம், அறிவிப்பாளர் மாறுபடலாம். ஆனால் கூறப்படும் செய்திகள் இரண்டும் ஒன்றாக இருப்பதை காணலாம்.

இந்நூலில் இடம் பெற்றுள்ள நபிமொழிகளிலிருந்து ஏதேனும் சந்தேகம் ஏற்பட்டால் அதனை எங்களுக்கு தெரியப்படுத்துங்கள்! உடனுக்குடன் பதில்தர இயலாவிட்டாலும் எங்களால் முடிந்தவரை விரைவாக பதில் தர முயற்சிக்கின்றோம். இன்ஷா அல்லாஹ்! தங்களின் மிகமுக்கியக்

கேள்விகளுக்குரிய பதில்கள் -வருங்காலங்களில்- ஹதீஸ்களின் அடிக்குறிப்புகளாகவும் இணைக்கப்பட வாய்ப்புகள் உள்ளன என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

நன்றிகள் :

இப்பணிக்கு சென்னை ரஹ்மத் அறக்கட்டளையின் வெளியீடான ஸஹீஹுல் புகாரீயும் ஸவூதி அரேபியா **(ரியாத்) தாருஸ் ஸலாம் வெளியீடான அல்லுஃலுவு வல்மர்ஜான்** ஆங்கில மொழியாக்கமும் எங்களுக்கு பெரிதும் உதவின. தமிழகத்தைச் சார்ந்த அன்புச் சகோதரர் **மன்சூர் (நிஹாத் அரப் – ஜித்தா)** அவர்கள் கணிப்பொறிக் கோர்வை செய்து தந்து உதவினார். தமிழ்நாடு, பண்ருட்டியைச் சார்ந்த அன்புச் சகோதரர். **இ. அப்துல் ஹமீது** அவர்கள் தமிழ் பிழைதிருத்தம் செய்தும், பல ஆலோசனைகள் வழங்கியும் உதவினார். **மதீனா பல்கலைகழகத்தில் பட்டம்** பெற்ற இலங்கையைச் சார்ந்த மதிப்பிற்குரிய **மார்க்க அறிஞர். கே. எல். எம் இப்ராஹிம் மதனி (ஜித்தா)** அவர்கள் மொழி பெயர்ப்பை மேற்பார்வையிட்டும் தகுந்த ஆலோசனைகளைக் கூறியும் உதவினார்கள். மேலும் பல மார்க்க ஆர்வலர்கள் இப்பணி சிறக்க உரிய ஆலோசனைகள் வழங்கி, எங்களை ஊக்குவித்தனர். இப்பணியை மக்களிடம் கொண்டு சேர்க்க இஸ்லாம்கல்வி.காம் முன்வந்துள்ளது.

அல்லாஹ் இவர்கள் அனைவருக்கும் இம்மையிலும் மறுமையிலும் நற்கூலி வழங்குவானாக! மனத்தூய்மையுடன் செய்யும் பணியாக அல்லாஹ் இதனை அங்கீகரிப்பானாக! மறுமையில் நபிமார்களுடனும் நல்லோர்களுடனும் ஜன்னத்துல் ஃபிர்தவ்ஸில் இணைந்து வாழ இதனை காரணமாக ஆக்கியருள்வானாக! இப்பணி முழுமையாக நிறைவடையவும் இதுபோன்ற மேலும்பல சேவைகள் செய்யவும் வாய்பளிப்பானாக! ஆமீன்.

**வேண்டுகோள்**

இம்முயற்சியில் நிறைவிருப்பின் எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! குறைகளிருப்பின் அது நாங்கள் செய்தவையே! சுட்டிகாட்டினால் தாட்சணியமின்றி சரிசெய்துக் கொள்வோம்! இன்ஷா அல்லாஹ்

## 2.நபி(ஸல்) அவர்கள் மீது பொய் கூறுவது பற்றி

அல்லாஹ்வின் தூதர் நபி(ஸல்) அவர்கள் மீது பொய் கூறுவது பற்றி கடும் எச்சரிக்கை!

1.அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
'என் மீது பொய் சொல்லாதீர்கள்! என் மீது பொய் சொன்னவன் நரகத்தில் நுழையட்டும்!'

அறிவிப்பவர் : அலி(ரலி)
ஆதார நூல்கள் : புகாரி 106, முஸ்லிம் 2)

2.'என் மீது, எவன் வேண்டுமென்றே பொய் சொல்கின்றானோ அவன் நரகத்தில் தனது இருப்பிடத்தை அமைத்துக்கொள்ளட்டும்' என நபி(ஸல்) அவர்கள் கூறியிருப்பதனால்தான் உங்களுக்கு நான் அதிகமான நபிமொழிகளை எடுத்துரைக்காமல் என்னைத் தடுத்துக் கொள்கிறேன் என்று அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அனஸ்(ரலி)
நூல்கள் : புகாரி 108, முஸ்லிம் 4

3.அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'என்மீது யார் வேண்டுமென்றே பொய்யுரைப்பானோ அவன் நரகத்தில் தனது இருப்பிடத்தை அமைத்துக் கொள்ளட்டும்'.

அறிவிப்பவர் : அபூஹுரைரா(ரலி)
நூல்கள் : புகாரி 110, முஸ்லிம் 4

4- அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'என் மீது கூறும் பொய் (உங்களில்) ஒருவரின் மீதும் கூறும் பொய்யைப் போன்றதன்று. யார் என் மீது வேண்டுமென்றே பொய்யுரைக்கின்றானோ அவன் தன் இருப்பிடத்தை நரகத்தில் ஆக்கிக் கொள்ளட்டும்!'

அறிவிப்பவர் : முகிரா(ரலி)
நூல்கள் : புகாரி 1291, முஸ்லிம் 5

## 3.ஈமான் என்றால் என்ன?

ஈமான் என்றால் என்ன? அதன் தன்மைகள் யாவை?

5- நபி(ஸல்)அவர்கள் ஒரு நாள் மக்கள் மத்தியில் இருந்தார்கள். அப்போது ஜிப்ரீல் (அலை) அவர்கள் (மனிதரின் தோற்றத்தில் வந்து நபி -ஸல்-) அவர்களிடம் ஈமான் என்றால் என்ன? என்று கேட்டார். அதற்கு நபியவர்கள், ஈமான் என்பது அல்லாஹ்வையும் அவனுடைய வானவர்களையும் அவனுடைய சந்திப்பையும் அவன் தூதர்களையும் நீர் நம்புவது. மேலும், மரணத்திற்குப் பின் எழுப்பப்படுவதையும் நீர் நம்புவது எனக் கூறினார்கள். இஸ்லாம் என்றால் என்ன? என்று கேட்டார். அதற்கவர்கள், இஸ்லாம் என்பது அல்லாஹ்வுக்கு(எதனையும்) நீர் இணையாகக் கருதாத நிலையில் அவனை மட்டுமே நீர் வணங்குவதும் தொழுகையை நிலைநிறுத்தி வருவதும் கடமையாக்கப்பட்ட ஜகாதை நீர் வழங்கி வருவதும் ரமலான் மாதத்தில் நீர் நோன்பு நோற்பதுமாகும் என்று கூறினார்கள்.

இஹ்ஸான் என்றால் என்ன? என்று கேட்டார். அதற்கவர்கள், (இஹ்ஸான் என்பது) அல்லாஹ்வை (நேரில்) காண்பதைப் போன்று நீர் வணங்குவதாகும். நீர் அவனைப் பார்க்கா விட்டாலும் நிச்சயமாக அவன் உம்மைப் பார்த்துக் கொண்டு இருக்கிறான் என்றார்கள். அடுத்து மறுமை நாள் எப்போது வரும்? என்று கேட்டார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்; கூறினார்கள்: அதைப் பற்றிக் கேட்கின்ற உம்மை விட கேட்கப்படும் (நான்) மிக்க அறிந்தவரல்லர். எனினும் அதன் (சில) அடையாளங்களைப் பற்றி உமக்குச் சொல்கிறேன். அவை: ஒரு அடிமைப் பெண் தனக்கு எஜமானாகப் போகிறவனை ஈன்றெடுத்தல். மேலும் கறுப்பு நிற ஒட்டகங்களை மேய்த்துக் கொண்டிருந்த மக்கள் உயர்ந்த கட்டிடங்கள் கட்டித் தமக்குள் பெருமையடித்துக் கொள்ளல். ஐந்து விஷயங்களை அல்லாஹ்வைத் தவிர யாரும் அறியமாட்டார்கள் என்று கூறிவிட்டு, மறுமை நாளைப் பற்றிய ஞானம் அல்லாஹ்விடமே உள்ளது என்ற (31:34)வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

பின்னர் அம்மனிதர் திரும்பிச் சென்று விட்டார். அவரை அழைத்து வாருங்கள் என்றார்கள். சென்று பார்த்த போது அவரைக் காணவில்லை. அப்போது நபி (ஸல்) அவர்கள், இவர் தான் ஜிப்ரீல்! மக்களுக்கு அவர்களின் மார்க்கத்தைக் கற்றுக் கொடுக்க வந்திருக்கிறார் என்றார்கள்.

**(அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி), நூல்கள் : புகாரி 50, முஸ்லிம் 10)**

## 4.தொழுகை

### இஸ்லாத்தின் ஐந்து கடமைகளில் ஒன்றான தொழுகைகள்

6- நஜ்த் தேசத்தைச் சார்ந்த ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்தார். அவருடைய தலை பரட்டையாக இருந்தது. குரல் செவியில் ஒலித்தது. ஆனால் அவர் என்ன சொல்கிறார் என்பது புரியவில்லை. நபி(ஸல்) அவர்களின் அருகில் வந்ததும் இஸ்லாத்தைப் பற்றிக் கேட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் இஸ்லாம் (என்பது) இரவிலும் பகலிலும் ஐவேளைத் தொழுவது என்றார்கள். உடனே அவர், இதனைத் தவிர நான் நிறைவேற்ற வேண்டிய வேறு ஏதேனும் (கடமையான தொழுகைகள்) உள்ளனவா? என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், இல்லை! இதனைத் தவிர நீர் விரும்பி நிறைவேற்றும் உபரியான -தொழுகைகள்-தான் உள்ளன என்று பதிலளித்தார்கள். மேலும் ரமலான் மாதம் நோன்பு நோற்பதும் இஸ்லாத்தின் கடமையாகும் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே அவர், இதனைத் தவிர நான் நிறைவேற்ற வேண்டிய வேறு ஏதேனும் (கடமையான நோன்புகள்) உள்ளனவா? என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், இல்லை! இதனைத் தவிர நீர் விரும்பி நிறைவேற்றும் உபரியான -நோன்புகள்-தான் உள்ளன என்று பதிலளித்தார்கள். மேலும் அவரிடம் நபி(ஸல்) அவர்கள் ஜகாத்தைப் பற்றியும் கூறினார்கள். அதற்கவர் இதனைத் தவிர நான் நிறைவேற்ற வேண்டிய வேறு ஏதேனும் (கடமையான ஜகாத்) உள்ளதா? என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், இல்லை! இதனைத் தவிர நீர் விரும்பி நிறைவேற்றும் உபரியான -தர்மங்கள்-தான் உள்ளன என்று பதிலளித்தார்கள். உடனே அம்மனிதர் அல்லாஹ்வின் மீதாணையாக நான் இவற்றை விட கூட்டவும் மாட்டேன், குறைக்கவும் மாட்டேன் என்று கூறியவாறு திரும்பிச்

சென்று விட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், இவர் கூறியதற்கேற்ப நடந்து கொண்டால் வெற்றியடைந்து விட்டார் என்றார்கள்.

(அறிவிப்பவர் : தல்ஹா (ரலி), நூல்கள் : புகாரி 46, (முஸ்லிம் 12)

## 5.சுவனத்தில் நுழையச் செய்யும் ஈமான்

7- ஒரு மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே! என்னைச் சொர்க்கத்தில் சேர்க்கும் ஒரு (நற்)செயலை எனக்குக் கூறுங்கள்! என்று (அவசரமாகக்) கேட்டார். அப்போது மக்கள், இவருக்கென்ன நேர்ந்தது? இவருக்கென்ன நேர்ந்தது? என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், அவருக்கு ஏதேனும் (அவசரத்) தேவை இருக்கலாம்! என்று (மக்களை நோக்கிச்) கூறி விட்டு, (அந்த மனிதரை நோக்கி) அல்லாஹ்வுக்கு எதனையும் இணையாக்காதவராக அவனை மட்டுமே நீர் வணங்க வேண்டும்! தொழுகையை நிலை நாட்டவேண்டும்! ஜகாத்தை நிறைவேற்ற வேண்டும்! உறவைப் பேணிக் கொள்ளவேண்டும்! என்று கூறி விட்டு, உமது வாகனத்தில் புறப்படுவீ ராக என்றார்கள்.
அம்மனிதர் (அப்போது)தமது வாகனத்தில் அமர்ந்திருந்தார் போலும்!

(அறிவிப்பவர் : அபூஅய்யூப் அல்அன்சாரி(ரலி), நூல்கள்: புஹாரி 5983, (முஸ்லிம் 1415)

8. கிராமவாசி ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, நான் சுவர்க்கம் செல்வதற்கேற்ற ஒரு காரியத்தை எனக்குக் கூறுங்கள்! என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், அல்லாஹ்வுக்கு எதனையும் இணையாக்காதவராக அவனை மட்டுமே நீர் வணங்கவேண்டும். விதிக்கப்பட்ட தொழுகைகளையும் நிர்ணயிக்கப்பட்ட ஜகாத்தையும் நிறைவேற்ற வேண்டும்! ரமலானில் நோன்பு நோற்க வேண்டும்! என்றார்கள். அதற்கவர், என் உயிர் எவன் கைவசத்தில் உள்ளதோ அவன் மேல் ஆணையாக! இதை விட எதையும் அதிகமாகச் செய்ய மாட்டேன் என்றார். அவர் திரும்பிச் சென்றதும் நபி(ஸல்) அவர்கள், சுவர்க்கவாசிகளில் ஒருவரைப் பார்க்க விரும்புவோர் இவரைப் பார்க்கட்டும்! என்றார்கள்.

(அறிவிப்பவர் : அபூஹுரைரா(ரலி), நூல்கள்: புஹாரி 1397, (முஸ்லிம் 16)

## 6.விசுவாசம் பேணுதல் மற்றும் அழைப்பு

அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் விசுவாசங்கொள்வது. மார்க்கக் கடமைகளைப் பேணுவது. மக்களை அதன் பால் அழைப்பது

10- இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள் : அப்துல் கைஸூடைய தூதுக் குழுவினர் நபி(ஸல்) அவர்களிடம் வந்த போது, வந்திருக்கும் இம்மக்கள் யார்? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கு அவர்கள், ரபீஆ வம்சத்தினர் என்றார்கள். நபி (ஸல்) அவர்கள் வருக! வெட்கப்படாமல், கவலை கொள்ளாமல் வருகை தாருங்கள்! என்று வரவேற்றார்கள். அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் யுத்தம் தடை செய்யப்பட்ட புனித மாதங்களில் தவிர (வேறு மாதங்களில்) தங்களை சந்திக்க முடியாது. காரணம் எங்களுக்கும் தங்களுக்குமிடையில் இறை நிராகரிப்பாளர்களான முளர் வம்சத்தினர் வாழ்கிறார்கள். எனவே திட்டவட்டமாக சில கட்டளை எங்களுக்கு கூறுங்கள். அவற்றை நாங்கள் இங்கே வராதவர்களுக்கும் அறிவிப்போம். அதன் மூலம் நாங்களும் சுவர்க்கம் செல்வோம் என்றனர். மேலும் நபி (ஸல்) அவர்களிடம் சிலவகை பானங்களைப் பற்றியும் கேட்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் நான்கு காரியங்களை அவர்களிடம் ஏவினார்கள். நான்கு காரியங்களை தடை செய்தார்கள். அல்லாஹ் ஒருவனையே நம்புமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டு விட்டு, அல்லாஹ் ஒருவனை மட்டும் நம்புவதென்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா? என்று கேட்டார்கள். அதற்கவர்கள், அல்லாஹ்வும் அவனுடைய தூதரும்தான் நன்கு அறிந்தவர்கள் என்றனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மது அல்லாஹ்வின் தூதர் என்றும் உறுதியாக சாட்சி கூறுவது, தொழுகையை நிலை நிறுத்துவது, ஜகாத்தை வழங்குவது, ரமலான் மாதம் நோன்பு நோற்பது, போரில் கிடைக்கும் பொருட்களிலிருந்து ஐந்தில் ஒரு பங்கை நீங்கள் வழங்கி விடுவது என்றார்கள். மேலும் (மது வைத்திருந்த) மண் சாடிகள், சுரைக் குடுக்கைகள், பேரீச்ச மரத்தின் அடிமரத்தைக் குடைந்து தயாரித்த மரப்பீப்பாய்கள், தார் பூசப்பட்ட பாத்திரங்கள் ஆகிய நான்கையும் தடை செய்தார்கள். (பின்னர் இத்தடை அகற்றப்பட்டது) இவற்றை நன்கு மனதில் பதிய

வைத்துக் கொண்டு (இங்கே வராதவர்களுக்கு) அறிவித்து விடுங்கள் என்றும் கூறினார்கள்.

(நூல்கள் : புஹாரி 53, முஸ்லிம் 24)

11- நபி (ஸல்) அவர்கள் முஆத் பின் ஜபல் (ரலி) அவர்களை யமன் நாட்டுக்கு அனுப்பி வைத்த போது அவரிடம், நீர் வேதம் கொடுக்கப்பட்ட மக்களிடம் சொல்கிறீர். எனவே அவர்களை முதன் முதலில் அல்லாஹ்வை வணங்குவதன்பால் அழைப்பீராக! அவர்கள் -வணக்கத்திற்குரியவன்- அல்லாஹ்தான் என்பதை அறிந்து கொண்டால், இரவு பகல் இணைந்த ஒரு நாளில் ஐந்து வேளை தொழுவதை அல்லாஹ் அவர்கள் மீது கடமையாக்கியிருக்கிறான் என்பதை அவர்களுக்குத் தெரிவிப்பீராக! தொழுகையை அவர்கள் நிறைவேற்றினால் அவர்களுடைய செல்வங்களிலிருந்து வசூலித்து அவர்களிடையே உள்ள ஏழைகளுக்குக் கொடுக்க வேண்டிய ஜகாத்தை அல்லாஹ் அவர்கள் மீது கடமையாக்கியுள்ளான் என்று அவர்களுக்குத் தெரிவிப்பீராக! இதற்கும் அவர்கள் கட்டுப்பட்டால் அவர்களிடமிருந்து ஜகாத் பெறுவீ ராக மக்களின் பொருட்களில் உயர்தரமானவற்றை வசூலிக்காதீர்! என்று அனுப்பினார்கள்.

(அறிவிப்பவர் :இப்னு அப்பாஸ்(ரலி), நூல்கள் : புஹாரி1458, முஸ்லிம் 28)

12- நபி(ஸல்) அவர்கள் முஆத்(ரலி)அவர்களை யமன் நாட்டுக்கு (ஆளுனராக) அனுப்பி வைத்தபோது, அநீதியிழைக்கப்பட்டவரின் (உமக்கு எதிராக) பிரார்த்திப்பதை அஞ்சிக் கொள்வீ ராக ஏனெனில் அப்பிரார்த்தனைக்கும் அல்லாஹ்வுக்கும் இடையே எந்தத் திரையும் இல்லை என்று கூறினார்கள்.

(அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி), நூல்கள்: புஹாரி2448, முஸ்லிம் 27)

## 7.ஏற்றுக் கொள்ளும் வரை..

லாயிலாஹ இல்லல்லாஹ், முஹம்மதுன் ரசூலுல்லாஹ் என்பதை ஏற்றுக் கொள்ளும் வரை மக்களுடன் போரிடுதல்.

13- நபி (ஸல்) அவர்கள் மரணித்து, அபூபக்ர் (ரலி) ஆட்சிக்கு) வந்ததும் அரபிகளில் சிலர் (ஜகாத்தை கடமையை மறுத்ததன் மூலம்) இறை நிராகரிப்பாளர்களாகி விட்டனர். (அவர்களுடன் போர் தொடுக்க அபூபக்ர்(ரலி)

தயாரானார்கள்) அப்போது உமர் (ரலி) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களை நோக்கி, லாயிலாஹ இல்லல்லாஹ் என்று கூறும்வரை மக்களுடன் போரிடுமாறு நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். எனவே அதனைக் கூறியவர் தமது உயிரையும் உடமையையும் என்னிடமிருந்து காத்துக் கொண்டார். அவர்களில் தண்டனைக்குரிய குற்றம் புரிந்தவரைத் தவிர (அவருக்கு அதற்குரிய தண்டனை நிறைவேற்றப்படும்). அவரது விசாரணை அல்லாஹ்விடமே உள்ளது என்று நபி(ஸல்) அவர்கள் கூறியிருக்கும் போது, நீங்கள் எவ்வாறு இந்த மக்களுடன் போர் செய்ய முடியும்? என்று கேட்டார்கள். அதற்கு அபூபக்ர் (ரலி), அல்லாஹ்வின் மீது ஆணையாக தொழுகையையும் ஜகாத்தையும் பிரித்துப் பார்ப்போருடன் நிச்சயமாக நான் போர் செய்வேன். ஜகாத் செல்வத்திற்குரிய கடமையாகும். அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி (ஸல்) அவர்களிடம் வழங்கி வந்த ஓர் ஒட்டகக் குட்டியை இவர்கள் வழங்க மறுத்தால் கூட அதை மறுத்ததற்காக நான் இவர்களுடன் போர் செய்வேன் என்று பதிலளித்தார்கள். இதனைச் செவியுற்ற உமர் (ரலி), அல்லாஹ்வின் மீது ஆணையாக! ஆபூபக்ரின் இதயத்தை (தீர்க்கமான தெளிவைப் பெரும் விதத்தில்) அல்லாஹ் விசாலாமாக்கியிருந்தாலேயே இவ்வாறு கூறினார்! அவர் கூறியதே சரியானது! என நான் விளங்கிக் கொண்டேன் என்றார்கள்.

(அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி), நூல்கள்: புஹாரி1400, முஸ்லிம் 29)

14- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை (லா இலாஹ இல்லல்லாஹ்) என்று கூறும்வரை மக்களுடன் போரிடுமாறு நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். எனவே லா இலாஹ இல்லல்லாஹ் என்று கூறியவர் தமது உயிரையும் உடமையையும் என்னிடமிருந்து காத்துக் கொண்டார். அவர்களில் தண்டனைக்குரிய குற்றம் புரிந்தவரைத் தவிர (அவருக்கு அதற்குரிய தண்டனை நிறைவேற்றப்படும்) அவரது விசாரணை அல்லாஹ்விடமே உள்ளது.

(அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்கள் : புஹாரி2946, முஸ்லிம் 30)

15- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதராவார்கள் என்றும் உறுதியாக சாட்சி கூறி, தொழுகையையும் நிலை நாட்டி, ஜகாத்தையும் வழங்கும் வரை மக்களுடன் போரிடுமாறு நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். எனவே அவர்கள் இதனைச் செய்துவிடுவார்களானால், அவர்களுடைய உயிர்களையும் உடமைகளையும் என்னிடமிருந்து காத்துக் கொண்டனர். அவர்களில் இஸ்லாத்தில் தண்டனைக்குரிய குற்றம் புரிந்தவர்களைத் தவிர (அவர்களுக்கு அதற்குரிய தண்டனை நிறைவேற்றப்படும்) அவர்களுடைய விசாரணை அல்லாஹ்விடமே உள்ளது.

(அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி) நூல்கள் : புகாரி 25, முஸ்லிம் 25)

## 8. ஈமானின் முதல் அங்கம்

ஈமானின் முதல் அங்கம் வணக்கத்திற்குறியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என நம்புவது.

16- அபூதாலிபுக்கு மரணம் நெருங்கிய போது நபி (ஸல்)அவர்கள் அவரிடம் வந்தார்கள். அங்கு அபூ ஜஹ்ல் பின் ஹிஷாம்,அப்துல்லாஹ் பின் அபீ உமய்யா ஆகிய இருவரும் இருப்பதைக் கண்டார்கள். நபி (ஸல்) அவர்கள் அபூதாலிபிடம், எனது பெரிய தந்தையே! லாயிலாஹ இல்லல்லாஹ் என்ற வாசகத்தைச் சொல்லி விடுங்கள்! அதன் மூலம் நான் அல்லாஹ்விடம் உங்களுக்காக சாட்சிக் கூறுவேன்,என்று கூறினார்கள். அப்போது அபூ ஜஹ்லும் அப்துல்லாஹ் பின் அபீ உமய்யாவும், அபூதாலிபே! அப்துல் முத்தலிபின் மார்க்கத்தை நீர் புறக்கணிக்கப்போகின்றீரா? எனக்கேட்டனர். இவ்வாறு நபி (ஸல்)அவர்கள் ஒரு புறமும் அவ்விருவரும் மறுபுறமுமாக அவரை வற்புறுத்திக் கொண்டிருக்கும்போது அபூதாலிப் கடைசியாக, நான் அப்துல் முத்தலிபின் மார்க்கத்திலேயே(மரணிக்கின்றேன்)என்று கூறியதோடு லாஇலாஹ இல்லல்லாஹ் எனக் கூறவும் மறுத்து விட்டார். அப்போது நபி(ஸல்)அவர்கள், அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் தடுக்கப்படும் வரை நான் உங்களுக்காகப் பாவமன்னிப்புத் தேடுவேன், என்று

கூறியதும்,இணைவைப்பவர்களுக்கு பாவமன்னிப்புக் கோருவது நபிக்கும் ஈமான் கொண்டவர்களுக்கும் தகுதியானதன்று,(அல்குர்ஆன்-9:113) என்ற வசனத்தை அல்லாஹ் அருளினான்.

(புஹாரி:1360 அல் முஸய்யப் பின் ஹஸ்ன்(ரழி)

## 9. ஏகத்துவத்தை உள்ளத்தில் உறுதியாய் நம்பியவர்

எந்த வித சந்தேகமுமின்றி ஏகத்துவத்தை உள்ளத்தில் உறுதியாய் நம்பியவாறு அல்லாஹ்வைச் சந்திப்பவர் சுவனில் நுழைவார். அவரை நரக நெருப்பு தீண்டாது.

17- வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்றும் முஹம்மது அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாவார் என்றும் ஈஸா(அலை)அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாவார் என்றும் அல்லாஹ் மர்யமை நோக்கிச் சொன்ன(ஆகுக! என்னும்) ஒரு வார்த்தை(யால் பிறந்தவர்)என்றும், அவனிடமிருந்து(ஊதப்பட்ட)ஓர் உயிர்,என்றும்,சொர்க்கம் (இருப்பது)உண்மை தான், என்றும்,எவர்(சொல்லால் உரைத்து, உள்ளத்தால் நம்பி) உறுதிமொழி கூறுகின்றாரோ அவரை அல்லாஹ் அவரது செயல்களுக்கேற்ப சொர்க்கத்தில் புகுத்துவான் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி3435: உபாதா(ரலி)

18- (ஒரு முறை) நான் நபி(ஸல்)அவர்களுக்குப் பின்னால் வாகனத்தில் அமர்ந்து கொண்டிருந்தேன். எனக்கும் நபிகளாருக்கும் இடையே(ஒட்டகச்)சேணத்துடன் இணைந்த சாய்வுக் கட்டை தவிர வேறெதுவும் இருக்கவில்லை.(அந்த அளவுக்கு நெருக்கத்தில் நான் இருந்தேன்.) அப்போது நபி(ஸல்)அவர்கள் முஆதே! என்று அழைத்தார்கள். நான் அல்லாஹ்வின் தூதரே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன்.(கூறுங்கள்)என்றேன். பிறகு சிறிது தூரம் சென்ற பின்னர் மீண்டும் முஆத் பின் ஜபலே! என அழைத்தார்கள். நான் (அப்போதும்)அல்லாஹ்வின் தூதரே! இதோ கீழ்படியக் காத்திருக்கிறேன். (கூறுங்கள்)என்று பதிலளித்தேன். நுபி(ஸல்)அவர்கள் அடியார்கள் மீது அல்லாஹ்வுக்குள்ள உரிpமை என்ன என்பதை நீர் அறிவீ ரா என்று கேட்டார்கள்.

நான், அல்லாஹ்வும் அவருடைய தூதருமே நன்கறிந்தவர்கள் என்று சொன்னேன். நபி(ஸல்)அவர்கள் அடியார்கள் மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்ன வென்றால் அவர்கள் அவனையே வணங்கிட வேண்டும் அவனுக்கு எதனையும் (எவரையும்)இணை வைக்கக்கூடாது என்று கூறினார்கள். பிறகு சிறிது தூரம் சென்ற பின்னர் முஆது பின் ஜபலே! என்று அழைத்தார்கள். நான் அல்லாஹ்வின் தூதரே! இதோ கீழ்படியக் காத்திருக்கிறேன்.(கூறுங்கள்)என்று சொன்னேன். நபி(ஸல்)அவர்கள் அடியார்கள் அதை நிறை வேற்றினால் அவர்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்ன தெரியுமா? என்று கேட்டார்கள். நான் அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள், என்று சொன்னேன். ஆடிபார்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்னவென்றால், அவர்களை அவன் (மறுமையில)வேதனைப் படுத்தாமல் இருப்பதாகும் என்று சொன்னார்கள்.

புஹாரி6500: (முஆத் பின் ஜபல்(ரலி)

19- நான் நபி(ஸல்)அவர்களுக்குப் பின்னால் உஃபைர் என்றழைக்கப்பட்ட கழுதையின் மீது அமர்ந்திருந்தேன். அப்போது அவர்கள் முஆதே! அல்லாஹ்வுக்கு மக்கள் மீதுள்ள உரிமை என்ன, மக்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்ன என்பதை நீர் அறிவீரா? என்று (என்னிடம்)கேட்டார்கள். நான் அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள் என்று பதில் கூறினேன். நபி(ஸல்)அவர்கள், மக்கள் மீது அல்லாஹ்வுக்கு உள்ள உரிமை என்னவென்றால்,அவர்கள் அவனை(யே)வணங்கிட வேண்டும்,அவனுக்கு எதனையும்(எவரையும்) இணை கற்பிக்கக் கூடாது என்பதாகும். அல்லாஹ்வின் மீது மக்களுக்குள்ள உரிமை, அவனுக்கு இணை கற்பிக்காமலிருப்பவரை அவன் வேதனைப் படுத்தாமல் இருப்பதாகும் என்று கூறினார்கள். நான் அல்லாஹ்வின் தூதரே! நான் மக்களுக்கு இந்த நற்செய்தியை அறிவிக்கட்டுமா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,அவர்களுக்கு (இந்த நற்செய்தியை)அறிவிக்காதீர்கள்.அவர்கள் இதையே நம்பி (நற்செயல்களில் ஈடுபடாமல்) இருந்து விடுவார்கள், என்று பதிலளித்தார்கள்.

புஹாரி2856: (முஆத்(ரலி)

20- ஒரே வாகனத்தின் மீது முஆது(ரலி) அவர்கள் நபி(ஸல்)அவர்களுக்குப் பின்னே அமர்ந்திருக்கும் நிலையில், நபி(ஸல்) அவர்கள் 'முஆதே!" என்று அழைத்தார்கள். 'இதோ உள்ளேன்; இறைத்தூதர் அவர்களே! (கட்டுப்படுவதைப்) பெரும் பேறாகவும் கருதுகிறேன்' என்று முஆத்(ரலி) கூறினார். 'முஆதே!' என்று என மீண்டும் நபி(ஸல்) அவர்கள் அழைத்தார்கள். 'இதோ உள்ளேன்; இறைத்தூதர் அவர்களே! (கட்டுப்படுவதைப்) பெரும் பேறாகவும் கருதுகிறேன்' என மீண்டும் முஆத்(ரலி) கூறினார். இவ்வாறு மூன்று முறை கூறப்பட்டது. பிறகு 'தன் உள்ளத்திலிருந்து உண்மையான எண்ணத்துடன் வணங்கி வழிபடுவதற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாருமில்லை என்றும், முஹம்மத் அல்லாஹ்வின் தூதராவார்கள் என்றும் உறுதியாக நம்பும் எவரையும் அல்லாஹ் நரகத்திற்குச் செல்ல விட மாட்டேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது 'இறைத்தூதர் அவர்களே! இச்செய்தியை நான் மக்களுக்கு அறிவித்து விடலாமா? அவர்கள் மகிழ்ந்து போவார்களே!' என்று முஆத் கேட்டதற்கு 'அவ்வாறு நீர் அறிவிக்கும் அச்சமயத்தில் (இது மட்டும் போதுமே என்று) அவர்கள் அசட்டையாக இருந்துவிடுவார்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(கல்வியை மறைத்த) குற்றத்திலிருந்து தப்புவதற்காக தம் மரணத் தருவாயில்தான் இந்த ஹதீஸை முஆத்(ரலி) அறிவித்திருக்கிறார்கள்.

புஹாரி 128: அனஸ் இப்னு மாலிக்(ரலி)

## 10. ஈமானின் அநேக கிளைகள்

21- ஈமான் அறுபதுக்கும் மேற்பட்ட கிளைகளாக உள்ளது. வெட்கம் என்பது ஈமானின் ஒரு கிளையாகும் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி9: அபூஹுரைரா(ரலி)

22- அன்சாரிகளைச் சேர்ந்த ஒரு மனிதர் தமது சகோதரர்(அதிகம்) வெட்கப் படுவதைக் கண்டித்துக் கொண்டிருந்த போது அவ்வழியே நபி(ஸல்)அவர்கள்

சென்றார்கள். உடனே,அவரை(க் கண்டிக்காதீர்கள்) விட்டு விடுங்கள். ஏனெனில் நிச்சயமாக வெட்கம் ஈமானின் ஓரம்சம் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி24: அப்துல்லாஹ் (இப்னு உமர்(ரலி)

23- இம்ரான் பின் ஹுஸைன்(ரலி)அவர்கள், நாணம் நன்மையை மட்டுமே தரும் என நபி(ஸல்)அவர்கள் சொன்னார்கள் என்று கூறினார்கள்.

புஹாரி6117: இம்ரான் பின் ஹுஸைன்(ரழி)

## 11. இஸ்லாத்தில் சிறந்தது காரியங்களில் சிறந்தது

### இஸ்லாத்தில் சிறந்தது எது? காரியங்களில் சிறந்தது எது?

24- ஒரு மனிதர் நபி(ஸல்)அவர்களிடம் இஸ்லாமி(யப் பண்புகளி)ல் சிறந்தது எது எனக் கேட்டார். அதற்கு நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள், (பசித்தோருக்கு)நீர் உணவளிப்பதும் நீர் அறிந்தவருக்கும் அறியாதவருக்கும் ஸலாம் கூறுவதுமாகும் என்று கூறினார்கள்.

புஹாரி-12: அப்துல்லாஹ் பின் அம்ர்(ரலி)

25- அல்லாஹ்வின் தூதரே! இஸ்லாத்தில் சிறந்தது எது? என்று நபித்தோழர்கள் கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்)சொன்னார்கள், எவரது நாவிலிருந்தும் கரத்திலிருந்தும் பிற முஸ்லிம்கள் பாதுகாப்புப் பெற்றிருக்கிறாரோ அவரது செயலே சிறந்தது.

புஹாரி11: அபூ மூஸா(ரலி)

## 12. ஈமான் கொண்டவர் அதன் சுவையை உணர்தல்

### ஈமான் கொண்டவர் அதன் சுவையை உணர்தல்

26- எவரிடம் மூன்று தன்மைகளக் அமைந்து விட்டனவோ அவர் ஈமானின் சுமையை உணர்ந்தவராவார்(அவை)அல்லாஹ்வும் அவனது தூதரும் ஒருவருக்கு மற்றெதையும்விட அதிக நேசத்திற்குரிய வராவது, ஒருவர் மற்றொருவரை அல்லாஹ்வுக்காகவே நேசிப்பது, நெருப்பில் வீ சப்படுவதை வெறுப்பது போல்

இறை நிராகரிப்புக்குத் திரும்பிச் செல்வதை வெறுப்பது என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி16: அனஸ்(ரலி)

## 13. அல்லாஹ்வின் திருத்தூதரை நேசிப்பது

அல்லாஹ்வின் திருத்தூதரை ஒருவரின் குடும்பம் பிள்ளைகள், தந்தை பிற மனிதர்கள் ஆகியோரைக் காட்டிலும் அதிகம் நேசிப்பது

27- நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். உங்களில் ஒருவருக்கு அவரது தந்தை அவரது குழந்தைகள் ஏனைய மக்கள் அனைவரையும் விட நான் மிக அன்பானவராக ஆகும் வரை அவர்(உண்மையான)ஈமான் கொண்டவர் ஆகமாட்டார்.

புஹாரி15: அனஸ்(ரலி)

## 14. தனக்கு விரும்புவதையே தம் சகோதரனுக்கும்..

தனக்கு விரும்புவதையே தம் சகோதரனுக்கும் விரும்புவது ஈமானின் அடையாளம்

28- அல்லாஹ்வின் தூதர் அவர்கள்: உங்களில் ஒருவர் தமக்கு விரும்புவதையே தம் சகோதரனுக்கும் விரும்பும் வரை ((முழுமையான)ஈமான் கொண்டவர் ஆகமாட்டார் எனக்கூறினார்கள்.

புஹாரி13: அனஸ்(ரலி)

## 15. அண்டை வீ ட்டாருக்குஉதவுவது..

அண்டை வீட்டாருக்கு உதவுவது விருந்தினரை உபசரிப்பது நல்லதை பேசுவது அல்லது மௌனமாய் இருப்பது ஈமானின் ஒரு கிளையாகக் கருதுதல்

29- அல்லாஹ்வையும் மறுமைநாளையும் நம்பிக்கைக் கொண்டவர் தம் அண்டை வீ ட்டாருக்குத்தொல்லை தரவேண்டாம். அல்லாஹ்வையும் மறுமை நாளையும்

நம்பிக் கைக் கொண்டவர் தம் விருந்தாளியைக் கண்ணியப்படுத்தட்டும். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கைக் கொண்டவர் (ஒன்று)நல்லதைப் பேசட்டும் அல்லது வாய் மூடி இருக்கட்டும் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். புஹாரி6018: அபூஹுரைரா(ரலி)

30- நபி(ஸல்)அவர்கள் பேசிய போது என் காதுகளால் கேட்டேன். என் கண்களால் பார்த்தேன். அப்போது அவர்கள் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கைக் கொண்டவர் தம் அண்டை வீட்டாரைக்கண்ணியப் படுத்தட்டும். அல்லாஹவையும் மறுமை நாளையும் நம்பிக்கைக் கொண்டவர் தம் விருந்தாளிக்கு தமது கொடையை கண்ணியமாக வழங்கட்டும் என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதரே! அவருடைய கொடை என்ன? என்று கேட்கப்பட்டது அதற்கு அவர்கள்(அவருடைய கொடை) ஒரு பகல் ஓர் இரவு(உபசரிப்பது)ஆகும். விருந்து உபசாரம் மூன்று தினங்ளாகும் அதற்கு மேல் (அளிக்கும் உணவும் உபசரிப்பும்)அவருக்கு தர்மமாக அமையும். மேலும் அல்லாஹ்வையும் மறுமைநாளையும் நம்பிக்கைக் கொண்டவர் (ஒன்று)நல்லதைப்பேசட்டும் அல்லது வாய் மூடி இருக்கட்டும் என்று கூறினார்கள்.

புஹாரி6019: அபூஷுரைஹ் அல் அதவி(ரலி)

## 16. ஒருவர் மற்றவரை விட சிறந்தவராகயிருத்தல்

விசுவாசிகளில் ஒருவர் மற்றவரை விட சிறந்தவராகயிருத்தல். இவ்வகையில் எமன் தேசத்து மக்களின் சிறப்பு பற்றி

31- நபி(ஸல்)அவர்கள்தமது கரத்தால் யமன் நாட்டுசத் திசையை நோக்கி சைகை காட்டி இறைநம்பிக்கை அதோ அங்கிருக்கும் யமன் நாட்டைச் சார்ந்ததாகும். அறிந்து கொள்ளுங்கள் கல் மனமும்,(இறக்கமற்ற)கடின சுபாவமும், ஒட்டகங்களின் வால்களை பிடித்தபடி அவற்றை அதட்டிக் கொண்டே (நாடோடிகளாக)சென்று கொண்டிருக்கும்(பாளைவன)ஒட்டக மேய்ப்பவர்களிடையே காணப்படும். அங்கிருந்து தான் ஷைத்தானின் இரு

கொம்புகளும் உதயமாகும் குழப்பங்கள் தலை தூக்கும்(அதாவது)ரபிஆ மற்றும் முளர் குலத்தவர் இடையே அவை தோன்றும் என்று சொன்னார்கள்.

புஹாரி3302: உக்பா பின் அம்ர் அபூ மஸ்வூது(ரலி)

32- யமன்வாசிகள் உங்களிடம் வந்துள்ளனர். அவர்கள் இளகிய மனம் படைத்தவர்கள். மென்மைளான நெஞ்சம் உடையவர்கள். மார்க்க ஞானம் யமன் நாட்டைச் சார்ந்ததாகும், விவேகமும் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி – 4390: அபூஹுரைரா(ரலி)

33. இறை மறுப்பின் தலைமைப் பீடம் கிழக்குத் திசையில் (நெருப்பை வணங்கும் மஜூஸிகள் வசிக்கும் பாரசீகத்தில்)உள்ளது. குதிரைகள் மற்றும் ஒட்டகங்களின் உரிமையாளர்களிடமும் (நாடோடி) பாலைவன வாசிகளான ஒட்டகம் மேய்ப்பர்(களிடமும் பண்ணை முதலாளி)களிடமும் தற்பெறுமையும் அகம்பாவமும் காணப்படுகிறது. ஆடுகளின் உரிமையாளர்களிடம்(அடக்கமும் கம்பீரமும் கலந்த)அமைதிக் காணப்படுகிறது என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி3301: அபூஹுரைரா(ரலி)

34- பெருமையும் கர்வமும் கிராமவாசிகளான நாடோடிகளிடையே காணப்படும். ஆடு மேய்ப்பவர்களிடையே அமைதியும் பணிவும் காணப்படும். இறைநம்பிக்கை யமன் நாட்டைச் சேர்ந்ததாகும். மதி நுட்பமும் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி3499: அபூ ஹுரைரா(ரலி).

## 17. விசுவாசியின் விசுவாசம்

அல்லாஹ்வுக்கும், அவன் திருத்தூதருக்கும் கட்டுப்படுதல், முஸ்லிம் ஆட்சியாளர்களிடமும் பிற முஸ்லிம்களிடமும் உண்மையாளராகத் திகழ்தல்

35-நபி(ஸல்)அவர்களிடம் நான் (அவர்களது கட்டளையைச்) செவியேற்று அதற்குக் கீழ்படிந்து நடப்பேன் என்று உறுதிமொழியளித்தேன். அப்போது என்னால் இயன்ற விஷயங்களில் என்றென்றும் முஸ்லிம்களில்

ஒவ்வொருவருக்கும் நன்மையே நாடுவேன், என்றும் சேர்த்துச் சொல்லும்படி என்னிடம ்நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி7204: ஜரீர் பின் அப்தில்லாஹ்(ரலி)

### தீய செயல்கள் புரியும்போது ஈமான் குறைதல் தீய செயல்கள் புரியும் போது விசுவாசியின் விசுவாசம் அவனை விட்டும் நீங்குதல்

36- விபசாரம் புரிகின்றவன் விபசாரம் புரியும் போது இறை நம்பிக்கையாளனாக இருந்தபடி அதை செய்ய மாட்டான்.(மது அருந்துகிறவன்) மது அருந்தும் போது இறை நம்பிக்கையாளனாக இருந்தபடி மது அருந்தமாட்டான். திருடன் திருடும் போது இறை நம்பிக்iயாளனாக இருந்தபடி திருடமாட்டான். மற்றொரு அறிவிப்பில் மக்களின்மதிப்பு மிக்க செல்வத்தை மக்கள் தம் விழிகளை உயர்த்திப் பார்த்துக் கொண்டிருக்க கொள்ளையடிப்பவன் அதைக் கொள்ளையடிக்கும் போது இறைநம்பிக்கையளனாக இருந்தபடி கொள்ளையடிக்கமாட்டான் என நபி(ஸல்)அவர்கள் கூறியதாக இடம்பெற்றுள்ளது.

புஹாரி5578: அபூஹுரைரா(ரலி)

### நயவஞ்சகத்தின் அடையாளங்கள்

(நயவஞ்சகம் இரு வகைப்படும்: (1)நம்பிக்கையில் நயவஞ்சகம் (2)செயல்களில் நயவஞ்சகம்)

37- நான்கு பண்புகள் எவனிடம் உள்ளனவோ அவன் வடிகட்டிய முனாபிக் ஆவான். அவற்றில் ஏதேனும் ஒன்று யாரிடமேனும் இருந்தால் அதை விட்டொழிக்கும் வரை நயவஞ்சகத்தின் ஒரு பண்பு அவனிடம் இருந்த கொண்டே இருக்கும்.
அவைகளாவன:
நம்பினால் துரோகம் செய்வான். பேசினால் பொய்யே பேசுவான், ஒப்பந்தம் செய்து கொண்டால் அதை மீறுவான், விவாதம் புரிந்தால் நேர்மை தவறி பேசுவான் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி34: அப்துல்லாஹ் பின் அம்ர்(ரலி)

38- நயவஞ்சகனின் அறிகுறிகள் மூன்று:
பேசினால் பொய்யே பேசுவான், வாக்களித்தால் மீறுவான், நம்பினால் துரோகம் செய்வான்
ஏன நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி33: அபூஹுரைரா(ரலி)

### ஒரு விசுவாசி தன் சகோதர விசுவாசியை நிராகரிப்பவன் என்றால்

39- எந்த மனிதர் தம் ((முஸ்லிம்)சகோதரரைப் பார்த்து
கா..பிரே!(இறைமறுப்பாளனே!) என்று அழைக்கின்றாரோ நிச்சயமாக
அவர்களிருவரில் ஒருவர் அச்சொல்லுக்கு உரியவராகத் திரும்புவார் என
நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி6104: அப்துல்லாஹ் பின் உமர்(ரலி)

### வேண்டுமென்றே தன்தந்தையை அறிந்திருந்தும் தந்தையல்ல என்று நிராகரிப்பவனின் விசுவாசம் குறித்து

40- தன் தந்தை அல்லாத(ஒரு)வரை(அவர் தன் தந்தையல்ல என்று) விவரம்
அறிந்து கொண்டே அவர் தான் என் தந்தை என்று கூறும் ஒரு மனிதன்
அல்லாஹ்வுக்கு நன்றி கெட்டவனாகி விடுகிறான். தனக்கு வமிசாவளித்
தொடர்பு இல்லாத ஒரு குலத்தைக் குறித்து, தான், அந்தக் குலத்தைச்
சேர்ந்தவன் தான் என்று தன்னைப் பற்றிக் கூறிக் கொள்பவன்,தன்
இருப்பிடத்தை நரகத்தில் அமைத்துக் கொள்ளட்டு;ம் என
நபி(ஸல்)அவர்கள்கூறினார்கள்.

புஹாரி3508: அபூதர்(ரலி)

41- உங்கள் தந்தையரை நீங்கள் வெறுக்காதீர்கள் யார் தம் தந்தையை வெறுத்து
(வேறு யாரோ ஒருவரை தம் தந்தை என்று கூறி)விடுகின்றாரோ அவர்
நன்றிகொன்றவராவார்எனநபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி6768: அபூஹுரைரா(ரலி)

42- யார் தம் தந்தை அல்லாத ஒருவரை அவர் தம் தந்தை அல்ல என்று
தெரிந்து கொண்டே தந்தை என்று வாதாடுகிறாரோ அவர் மீது சொர்க்கம் தடை

செய்யப்பட்டதாகிவிடும் என அல்லாஹ்வின் தூதர் நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். **புஹாரி6766 : ஸஅத் இப்னு அபி வக்காஸ்(ரலி)**

## 18. ஒரு முஸ்லீமைத் திட்டுவது கொல்வது குறித்து..

ஒரு முஸ்லீமைத் திட்டுவது கொல்வது குறித்து..

43 நபி(ஸல்)அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் பின் மஸ்ஊது(ரலி) கூறியதாவது: ஒரு முஸ்லிமை ஏசுவது பாவம், அவனுடன் போரிடுவது, கொலை செய்வது இறைநிராகரிப்பாகும்.

**புஹாரி 48 :அப்துல்லாஹ் பின் மஸ்ஊது (ரலி).**

ஒருவரை ஒருவர் வெட்டிக் கொண்டு நிராகரிப்போராகாதீர்..

44- நபி(ஸல்)அவர்கள் தமது இறுதி ஹஜ்ஜின் போது(மக்களுக்கு உரையாற்றிய நேரத்தில்)என்னிடம் மக்களை அமைதியுடன் செவிதாழ்த்திக் கேட்கும்படி செய்வீ ராக என்று கூறினார்கள்.(மக்கள் அமைதியுற்ற பின்னர்)எனக்குப் பிறகு நீங்கள் ஒருவர் கழுத்தை ஒருவர் வெட்டிக் கொள்ளும் காபிர்களாக மாறிவிட வேண்டாம் என்று சொன்னார்கள்.

**புஹாரி121: ஜரீர்(ரலி)**

45- நபி(ஸல்)அவர்கள்(தமது விடைபெறும் ஹஜ் உரையில்) ; ; உங்களுக்கு கேடுதான் (வைலக்கும்) அல்லது உங்களுக்கு அழிவுதான் (வைஹக்கும்) ; ; எனக்குப் பிறகு ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக் கொள்ளும் இறைமறுப்பாளர்களாக நீங்கள் மாறிவிடாதீர்கள், என்று கூறினார்கள்.

**புஹாரி 6166 :இப்னுஉமர்(ரலி)**

## 19. நட்சத்திரத்தால் மழையா?

இந்த நட்சத்திரத்தால் மழை பெற்றோம் என்று கூறுபவர் பற்றி..

46- நபி(ஸல்)அவர்கள் ஹுதைபிய்யா என்னுமிடத்தில் எங்களுக்கு ஸுபுஹ் தொழுவித்தார்கள். அன்றிரவு மழை பெய்திருந்தது. தொழுது முடித்து மக்களை

நோக்கி உங்கள் இறைவன் என்ன கூறினான் என்பதை நீங்கள் அறிவீர்களா? என்று கேட்டார்கள். அல்லாஹ்வும் அவனது தூதருமே இதைப் பற்றி நன்கு அறிந்தவர்கள் என்று நாங்கள் கூறினோம். என்னை விசுவாசிக்கக் கூடியவர்களும் என்னை நிராகரிக்கக் கூடியவர்களுமான என் அடியார்கள் இரண்டு பிரிவுகளாக ஆனார்கள். அல்லாஹ்வின் கருணையினாலும் அவனது அருட்கொடையினாலும் நமக்கு மழை பொழிந்தது எனக் கூறுபவர்கள் என்னை நம்பி, நட்சத்திரங்களை மறுத்தவர்களாவார். இந்த நட்சத்திரத்தினால் எங்களுக்கு மழை பொழிந்தது எனக் கூறுபவர்கள் என்னை நிராகரித்து, நட்சத்திரங்களை விசுவாசித்தவர்களாவர் என்று இறைவன் கூறினான் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி846: ஸைத் பின் காலித் அல்ஜுஹனி(ரலி)**

## 20. அன்சாரிகளை நேசிப்பது குறித்து.

அன்சாரிகளை(மதீனத்து நபித்தோழர்களை)நேசிப்பது ஈமானின் அங்கம்..

47- ஈமானின் அடையாளம் அன்சாரிகளை நேசிப்பதாகும். நயவஞ்சகத்தின் அடையாளம் அன்சாரிகளை வெறுப்பதாகும் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி17: அனஸ்(ரலி)**

48- இறை நம்பிக்கையாளரைத் தவிர வேறெவரும் அன்சாரிகளை நேசிக்க மாட்டார்கள். அவர்களை நயவஞ்சகர்களைத் தவிர வேறெவரும் வெறுக்கவும் மாட்டார்கள். யார் அவர்களை நேசிக்கிறார்களோ அவர்களை அல்லாஹ்வும் நேசிக்கிறான். யார் அவர்களை வெறுக்கிறார்களோ அவர்களை அல்லாஹ்வும் வெறுக்கிறான் என நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி3783: பராஉ(ரலி)**

## 21. விசுவாசத்தில் குறைவு இருப்பது குறித்து..

மார்க்க விசுவாசத்தில், கடமைகளில் குறைவு இருப்பது குறித்து..

49- ஹஜ்ஜுப் பெருநாள் அன்றோ நோன்புப் பெருநாள் அன்றோ தொழும் திடலிற்கு நபி(ஸல்)அவர்கள் சென்று கொண்டிருந்தார்கள். அப்போது சில பெண்களுக்கு அருகே அவர்கள் சென்றபோது,பெண்கள் சமூகமே! தான தர்மம்

செய்யுங்கள்! காரணம் நரகவாசிகளில் அதிகமாக இருப்பது நீங்கள் தாம் என எனக்குக் காட்டப்பட்டது என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதரே! ஏன?; என்று அப்பெண்கள் கேட்டனர். அதற்கு நீங்கள் அதிகமாகச் சாபமிடுகிறீர்கள், கணவனுக்கு நன்றி கெட்டவர்களாக மார்க்க கடமையும் அறிவும் குறைந்தவர்களாக இருந்து கொண்டு மனஉறுதியான கணவனின் புத்தியை மாற்றிவிடக் கூடியவர்களாக உங்களை விட வேறுயாரையும் காணவில்லை என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதரே! எங்களுடைய மார்க்க கடமையும் எங்களுடைய அறிவும் எந்த அடிப்படையில் குறைவாக உள்ளன என்று அப்பெண்கள் கேட்டனர். ஒரு பெண்ணின் சாட்சி ஒரு ஆணின் சாட்சியில் பாதியாகக் கருதப் படவில்லையா? என நபி(ஸல்)அவர்கள் கேட்டார்கள். அதற்கு ஆம் என அப்பெண்கள் கூறினர். அது தான் அவர்கள் அறிவு குன்றியவர்கள் என்பதைக் காட்டுகிறது. ஒரு பெண்ணிற்கு மாதவிடாய் ஏற்பட்டு விட்டால் அவள் தொழுகையையும் நோன்பையும்விட்டு விடுவதில்லையா? என நபி(ஸல்)அவர்கள்கேட்டார்கள். அதற்கும்,ஆம் எனப் பெண்கள் கூறினர் அது தான் பெண்கள் மார்க்க கடமையில் குறைவானவர்களாக இருக்கின்றனர் என்பதற்கு ஆதாரமாகும் என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி304: அபூ ஸயீதுல் குத்ரி(ரலி)

## 22. நல்லறங்களில் மிகச் சிறந்தது..

அல்லாஹ்வின் மீது விசவாசங்கொள்வது நல்லறங்களில் மிகச் சிறந்தது..

50- செயல்களில் சிறந்தது எது?என நபி(ஸல்)அவர்களிடம் வினவப்பட்டது. அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்பிக்கைக் கொள்வது என்றார்கள். பின்னர் எது? என வினவப்பட்டது. அல்லாஹ்வின் பாதையில் போர் புரிவது என்றார்கள். பின்னர் எது? என்று கேட்கப்பட்டது ஏற்றுக் கொள்ளப்படும் ஹஜ் என்றார்கள்.

புஹாரி: 26 அபூஹுரைரா (ரலி)

51- நான் நபி(ஸல்)அவர்களிடம் எந்த நற்செயல் சிறந்தது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,அல்லாஹ்வின் மீது ஈமான் (நம்பிக்கை) கொள்வதும் அவனது பாதையில் ஜிஹாத் செய்வதும் (போராடுவதும்) ஆகும்,என்று பதிலளித்தார்கள்.

நான் எந்த அடிமை(யை விடுதலை செய்வது)சிறந்தது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,அவர்களில் அதிக விலை கொண்ட அடிமையும் தன் எஜமானர்களிடம் பெறுமதி மிக்க அடிமையும்(தான் சிறந்தவர்கள்)என்று பதிலளித்தார்கள். நான் என்னால்,அது(அடிமை விடுதலை செய்வது)இயலவில்லையென்றால்? என்று கேட்டேன். நபி(ஸல்)அவர்கள்,பலவீனருக்கு உதவி செய், அல்லது உழைத்துச் சம்பாதிக்க இயலாதவனுக்கு நன்மை செய் என்று கூறினார்கள். நான் இதுவும் என்னால் இயலவில்லையென்றால்..? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,மக்களுக்குத் தீங்கு செய்யாமல் இரு,ஏனெனில் அதுவும் நீ உனக்கு செய்து கொள்ளும் ஒரு தர்மம் ஆகும். என்று கூறினார்கள்.

**புஹாரி2518: அபூதர்(ரலி)**

52- அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான செயல் எது? என்று நபி(ஸல்)அவர்களிடம் நான் கேட்டபோது, தொழுகையை அதற்குரிய நேரத்தில் தொழுவதாகும், என்று பதில் கூறினார்கள்.அதற்கு அடுத்து எது? என்றேன். பெற்றோருக்கு நன்மை செய்தல்,என்றார்கள். அதற்கு அடுத்து எது? என்றேன் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிதல் என்றனர். எனக்கு இவற்றை நபி(ஸல்)அவர்கள் அறிவித்தனர். (கேள்வியை)மேலும் நான் அதிகப்படுத்தியிருந்தால் நபி(ஸல்)அவர்களும் மேலும் சொல்லியிருப்பார்கள்.

**புஹாரி527: அப்துல்லாஹ் பின் மஸ்வூது(ரலி)**

## 23. இணைவைப்பது மிகப் பெரும் பாவமாகும்

வணக்க வழிபாடுகளில் அல்லாஹ்வுக்கு இணைவைப்பது மிகப் பெரும் பாவமாகும்..

53. நான் நபி(ஸல்) அவர்களிடம், ‘அல்லாஹ்விடம் பாவங்களில் மிகப் பெரியது எது?’ என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ‘அல்லாஹ் உன்னைப் படைத்திருக்க, அவனுக்கு நீ இணை கற்பிப்பது” என்று கூறினார்கள். நான், ‘நிச்சயமாக அது மிகப் பெரிய குற்றம் தான்” என்று சொல்லிவிட்டு, ‘பிறகு எது?’ என்று கேட்டேன். ‘உன் குழந்தை உன்னுடன் (அமர்ந்து உன் உணவைப் பங்குபோட்டு) உண்ணும் என அஞ்சி அதனை நீ கொல்வது” என்று கூறினார்கள். நான், ‘பிறகு எது?’ என்று கேட்க, அவர்கள், ‘உன் அண்டை வீட்டானின்மனைவியுடன் நீ விபச்சாரம் செய்வது” என்று கூறினார்கள்.

புஹாரி :4477 அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரலி)

பெரும் பாவங்கள் குறித்து..

54- (ஒரு முறை)பெரும்பாவங்களிலேயே மிகப் பெரும் பாவங்களை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? என்று நபி(ஸல்)அவர்கள் (மூன்றுமுறை)கேட்டார்கள். மக்கள்,ஆம் அல்லாஹ்வின்தூதரே!(அறிவியுங்கள்)என்று சொன்னார்கள். உடனேநபி(ஸல்)அவர்கள் அல்லாஹ்வுக்கு இணைவைப்பதும், பெற்றோருக்குத் துன்பம் தருவதும்(தான் அவை)என்று கூறிவிட்டு, சாய்ந்து கொண்டிருந்தவர்கள் எழுந்து அமர்ந்து, அறிந்து கொள்ளுங்கள். பொய் சாட்சியமும் (மிகப் பெரும்பாவம்)தான் என்று கூறினார்கள். நிறுத்திக் கொள்ளக் கூடாதா, என்று நாங்கள் சொல்கின்ற அளவுக்கு அதை (இறுதியாகச் சொன்னதை) திரும்பத் திரும்பக்கூறிக் கொண்டிருந்தார்கள்.

புஹாரி2654: அபூபக்ரா(ரலி)

55- நபி(ஸல்)அவர்களிடம் பெரும்பாவங்கள் பற்றிக்கேட்கப்பட்டது. நபி(ஸல்)அவர்கள், அல்லாஹ்வுக்கு இணைவைப்பது, பெற்றொருக்கு துன்பம் கொடுப்பது, தற்கொலை செய்து கொள்வது பொய்சாட்சி சொல்வது ஆகியன (பெரும்பாவங்களாகும்) என்று கூறினார்கள்.

புஹாரி2653: அனஸ்(ரலி)

56- அழித்தொழிக்கும் ஏழு பெரும்பாவங்களைத் தவிருங்கள் என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். மக்கள், அல்லாஹ்வின் தூதரே! அவை எவை? என்று கேட்டார்கள். நுபி(ஸல்)அவர்கள்,அல்லாஹ்வுக்கு இணைகற்பிப்பதும், சூனியம் செய்வதும், நியாயமின்றி கொல்லக் கூடாது எனஅல்லாஹ் புனிதப்படுத்தியுள்ள உயிரைக் கொல்வதும், வட்டி உண்பதும், அனாதைகளின் செல்வத்தை உண்பதும், போரின் போது புறமுதுகிட்டு ஒடுவதும்,அப்பாவிகளான இறைநம்பிக்கைக் கொண்ட,கற்புள்ள பெண்களின் மீது அவதூறு கூறுவதும் தான்(அந்தப் பெரும் பாவங்கள்)என்று பதில் கூறினார்கள்.

புஹாரி2766: அபூஹுரைரா(ரலி)

57-ஒரு மனிதர் தம் தாய் தந்தையரை சபிப்பது பெரும் பாவங்களில் உள்ளதாகும், என அல்லாஹ்வின் தூதர் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதரே! ஒரு மனிதர் தம் தாய் தந்தையரை எவ்வாறு சபிப்பார்? என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி(ஸல்)அவர்கள், ஒருவர் இன்னொருவரின் தந்தையை ஏசுவார், உடனே(பதிலுக்கு)அவர் அவருடைய தந்தையையும் தாயையும் ஏசுவார்.(ஆக,தம் தாய் தந்தையர் ஏசப்பட இவரே காரணமாகிறார்)என்றார்கள்.

புஹாரி5973: அப்துல்லாஹ் பின் அம்ர்(ரலி)

இணைவைக்காது மரணித்தோர் சுவனில்..

58- யார் அல்லாஹ்வுக்கு இணைவைத்தவராக மரணிக்கின்றாரோ அவர் நிச்சயமாக நரகத்தில் நுழைவார், என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். (அப்படியாயின்) யார் அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்காமல் மரணிக்கின்றாரோ அவர் நிச்சயமாகச் சொர்க்கத்தில் நுழைவார் என நான் கூறுகிறேன்.

புஹாரி1238: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது(ரலி)

59- எனது இரட்சகனிடமிருந்து ஒரு(வான)வர் என்னிடம் வந்து ஒரு சுபச் செய்தியை அறிவித்தார். அதாவது எனது சமுதாயத்தில் யார் அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்காமல் மரணிக்கின்றாரோ அவர் சொர்க்கத்தில் நுழைவார் என்று அல்லாஹ்வின் தூதர் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே, நான் 'அவர் விபச்சாரத்திலோ திருட்டிலோ ஈடுபட்டிருந்தாலுமா?' எனக் கேட்டேன். 'அவர் விபச்சாரத்திலோ திருட்டிலோ ஈடுபட்டிருந்தாலும்தான் என அவர்கள் கூறினார்கள்.

புஹாரி1237: அபூ தர்(ரலி)

## 24.நம்மைச் சார்ந்தவனல்ல..

நம்மை எதிர்க்க ஆயுதமேந்துபவன் நம்மைச் சார்ந்தவனல்ல..

63- நமக்கெதிராக ஆயுதம் ஏந்தியவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி7070: அப்துல்லாஹ் பின் உமர்(ரலி)

64- நமக்கெதிராக ஆயுதம் ஏந்தியவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி7071: அபூ மூசா(ரலி)

## 25.ஒப்பாரி கன்னங்களில் அடித்துக் கொள்வது..

ஒப்பாரி வைப்பது கன்னங்களில் அடித்துக் கொள்வது, சட்டையைக் கிழித்துக் கொள்வது, அறியாமைக் கால கலாச்சாரங்களில் ஈடுபடுவது குறித்து..

65- (துன்பத்தின் போது)கன்னங்களில் அறைந்து கொள்பவனும் ஆடைகளைக் கிழித்துக் கொள்பவனும் அறியாமைக் காலத்துச் சொற்களைப் பயன்படுத்துபவனும் நம்மைச் சேர்ந்தவனல்லன் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

புஹாரி1298: அப்துல்லாஹ் பின் மஸ்வூது(ரலி)

66- (என் தந்தை)அபூ மூஸா தமது கடுமையான மரண வேதனையால் மயக்கமடைந்து விட்டார். அவரது தலை அவரது மனைவியின் மடியில் இருந்தது. தம் மனைவியின் எந்தப் பேச்சுக்கும்) அவரால் பதில் சொல்ல முடியவில்லை. பின்பு மயக்கம் தெளிந்த போது நிச்சயமாக நபி(ஸல்)அவர்கள் (துன்பத்தின்போது)அதிக சப்தமிட்டு அழும் பெண்ணை விட்டும் மொட்டையடித்துக் கொள்ளும் பெண்ணை விட்டும் ஆடைகளை கிழித்துக் கொள்ளும் பெண்ணை விட்டும் தம்மை விலக்கிக் கொண்டார்கள். எவரிடமிருந்து நபி(ஸல்)அவர்கள் தம்மை விலக்கிக் கொண்டார்களோ அவரிடமிருந்து நானும் விலகிக் கொள்கிறேன், என்று கூறினார்.

புஹாரி1296: அபூ புர்தா பின் அபி மூஸா

## 26. அவதூறு கூறி விரோதத்தை ஏற்படுத்துதல்..

அவதூறு கூறி விரோதத்தை ஏற்படுத்துதல் பற்றி..

67- கோள் சொல்கிறவன் சொர்க்கம் செல்ல மாட்டான் என நபி(ஸல்)அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன் என்று ஹுதைஃபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி6056: ஹம்மாம் பின் ஹாரிஸ்(ரஹ்)

## 27. பொய் சத்தியம் செய்து விற்றல்..

பெருமைக்காக ஆடையை கரண்டைக்குக் கீழ் அணிதல், கொடுத்த தான தர்மங்களைச் சொல்லிக் காட்டுதல், பொய் சத்தியம் செய்து பொருட்களை விற்றல் போன்றவற்றுக்கு மறுமையில் கடுந்தண்டனை குறித்து..

68- மூன்று பேரை மறுமை நாளில் அல்லாஹ் ஏறெடுத்துப் பார்க்கவும் மாட்டான், அவர்களைத் தூய்மைப் படுத்தவும் மாட்டான். மேலும் அவர்களுக்குத் துன்பமிக்க வேதனையும் உண்டு. ஒருவன்,(மக்களின் பயணப்)பாதையில்- தேவைக்கு மிஞ்சிய தண்ணீரைப் பெற்றிருந்தும் வழிப்போர்கள் அதைப் பயன்படுத்த விடாமல் தடுத்து விட்டவன். இன்னொருவன், தன்(ஆட்சித்)தலைவரிடம் உலக ஆதாயத்திற்காகவே விசுவாசப் பிரமாணம் செய்து கொண்டவன், அவர் கொடுத்தால் (மட்டுமே)திருப்தியடைந்து, கொடுக்காமல் விட்டால் கோபம் கொள்பவன். மற்றொருவன், அஸர் தொழுகைக்குப் பிறகு(மக்கள் கடைவீதியில் திரளும் போது)தன் வியாபாரப் பொருளைக் காட்டி, எவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறெவனும் இல்லையோ அவன் மீது சத்தியமாக! இந்தப் பொருளுக்காக(இதைக் கொள்முதல் செய்யும் போது) நான் இன்ன(அதிக) விலையைத் தந்தேன். என்று கூறி, அதை ஒரு மனிதர் உண்மையென நம்பும்படி செய்தவன் (இப்படி வாடிக்கையாளரிடம் பொய் கூறி அவரை ஏமாற்றி, சொன்ன விலைக்கு அதை விற்றவன்)ஆவான்.

இதைக் கூறி விட்டு,எவர் அல்லாஹ்வுடன் செய்து கொண்ட உடன்படிக்கையையும் தம் சத்தியங்களையும் அற்ப விலைக்கு விற்று விடுகின்றார்களோ.. என்னும் இந்த(3:77) இறைவசனத்தை நபி(ஸல்) அவர்கள் ஓதினார்கள்.

**புஹாரி2358: அபூஹுரைரா(ரலி)**

## 28. தற்கொலையும் நரக நெருப்பும்......

69- யார் மலையின் மீதிலிருந்து கீழே குதித்து தற்கொலை செய்து கொள்கிறாரோ அவர் நரக நெருப்பில்(தள்ளப்பட்டு மேலிருந்து கீழே)என்றைக்கும் நிரந்தரமாக குதித்துக் கொண்டேயிருப்பார். யார் விஷம் குடித்து தற்கொலை செய்து கொள்கிறாரோ அவர் தமது விஷத்தை கையில் வைத்திருந்தபடி நரக

நெருப்பில் என்றென்றும் நிரந்தரமாக குடித்துக் கொணடேயிருப்பார். யார் ஒரு கூரிய ஆயுதத்தால் தற்கொலை செய்து கொள்கிறாரோ அவருடைய கூராயுதத்தை அவர் தமது கையில் வைத்துக் கொண்டு நரக நெருப்பில் தமது வயிற்றில் தாமே என்றென்றும் நிரந்தரமாக அதனால் குத்திக் கொண்டேயிருப்பார் என நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி: 5778 அபுஹுரைரா(ரலி)**

## 29. அவதூறு பரப்புவதும் கொலையை போன்றதே!

70- யார் இஸ்லாம் அல்லாத மார்க்கத்தின் மீது சத்தியம் செய்கிறாரோ அவர் தாம் சொன்னதைப் போன்றே ஆகிவிடுகிறார்.தமக்கு உடைமையில்லாத ஒன்றில் நேர்ச்சை செய்வது(ம்,அந்த நேர்ச்சையை நிறைவேற்றுவதும்)எந்த மனிதனுக்கும் தகாது எதன்மூலம் ஒருவர் தம்மைத்தாமே தற்கொலை செய்துகொள்கிறாரோ அதன் மூலம் அவர் மறுமை நாளில் வேதனை செய்யப்படுவார். இறை நம்பிக்கையாளரை ஒருவர் சபிப்பது அவரைக் கொலை செய்வது போன்றதாகும். யார் ஒர் இறை நம்பிக்கையாளரை இறைமறுப்பாளர்(காஃபிர்)என்று அவதூறு சொல்கிறாரோ அதுவும் அவரைக் கொலை செய்வது போன்றதேயாகும் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.இதை அந்த மரத்தினடியில்(பைஅத்துர் ரிள்வான்) உறுதிமொழி அளித்தவர்களில் ஒருவரான ஸாபித் பின் ளஹ்ஹாக்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**புஹாரி6047: ஸாபித் பின் ளஹ்ஹாக்(ரலி)**

## 30. சொர்க்கத்திற்குத் தகுதியான முஸ்லிமான ஆன்மா!

71- அல்லாஹ்வின் தூதர் நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் (கைபர் போரில்) கலந்து கொண்டோம். தன்னை முஸ்லிம் என்று கூறிக் கொண்ட ஒரு மனிதரைக் குறித்து நபி(ஸல்) அவர்கள், இவர் நரகவாசிகளில் ஒருவர், என்று கூறினார்கள். போரிடும் நேரம் வந்த போது காயம் ஒன்று அவருக்கு ஏற்பட்டது. நபி(ஸல்) அவர்களிடம், அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் எவரைக் குறித்து, இவர் நரகவாசிகளில் ஒருவர், என்று குறிப்பிட்டீர்களோ அவர் இன்று கடுமையாகப் போரிட்டு மடிந்து விட்டார் என்று கூறப்பட்டது. அப்போது

## 126.குளிப்பு கடமையான நேரத்தில் உறங்க....

175- மதி (அதிக உணர்ச்சியினால் ஏற்படும் கசிவு) வெளியாகும் ஆடவனாக நான் இருந்தேன். (இது பற்றி) கேட்க வெட்கப்பட்டு மிக்தாத் (ரலி)யை நபி (ஸல்) அவர்களிடத்தில் கேட்குமாறு ஏவினேன். அவர் அது பற்றி அவர்களிடம் வினவினார். அதற்காக உளூ செய்வது தான் கடமை (குளிக்க வேண்டிய கட்டாயமில்லை) என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி178: அலி (ரலி)**

176- நபி (ஸல்) அவர்கள் குளிப்புக் கடமையான நிலையில் தூங்க நினைத்தால், தங்கள் மர்மஸ்தலத்தைக் கழுவி விட்டுத் தொழுகைக்குரிய உளூ செய்வார்கள்.

**புஹாரி288: ஆயிஷா (ரலி)**

177- நம்மில் ஒருவர் குளிப்புக் கடமையான நிலையில் தூங்கலாமா? என உமர் (ரலி) நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு ஆம்! உங்களில் ஒருவர் குளிப்புக் கடமையானவராக இருக்கும்போது உளூ செய்து விட்டுத் தூங்கலாம் என நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

**புஹாரி287: உமர் (ரலி)**

178- இரவு நேரத்தில் தமக்கு குளிப்புக் கடமையாகி விடுகிறது என உமர் (ரலி) நபி (ஸல்) அவர்களிடம் கூறினார்கள். அதற்கு உளூ செய்யும், உமது உறுப்பைக் கழுவி விட்டு நீர் தூங்கும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி290: அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)**

179- நபி (ஸல்) அவர்கள் ஒரே இரவில் எல்லா மனைவியரிடமும் சென்று வருவார்கள். அன்று அவர்களுக்கு ஒன்பது மனைவியர் இருந்தனர்.

**புஹாரி284: அனஸ் பின் மாலிக்(ரலி)**

## 127.பெண்களுக்குக் கனவில் ஸ்கலிதம் ஆனால்...

180- உம்முஸுலைம் (ரலி) என்ற பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக அல்லாஹ் சத்தியத்தை சொல்வதற்கு வெட்கப்படுவதில்லை. ஒரு பெண்ணுக்கு ஸ்கலிதமானால் அவள் மீது குளிப்பு கடமையாகுமா? என்று கேட்டார். அதற்கு (ஆம்! அவள் உறங்கி விழித்ததும் தன் ஆடையில் இந்திரியத்) தண்ணீரைக் கண்டால் (குளிப்பது அவள் மீது கடமை

தான்) என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (இதைக்கேட்டுக் கொண்டிருந்த உம்முஸலமா (ரலி) அவர்கள் தமது முகத்தை (வெட்கத்தால்) மூடிக் கொண்டு, பெண்களுக்கும் ஸ்கலிதம் ஏற்படுமா என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் நன்றாகக் கேட்டாய்! ஆம்! அப்படி இல்லையென்றால் அவளது குழந்தை (சில சமயங்களில்) எதனால் அவளைப் போன்றிருக்கிறது? என்று கேட்டார்கள்.

புஹாரி130: உம்மு ஸலமா (ரலி)

## 128.கடமையான குளிப்பை எவ்வாறு நிறைவேற்றுவது

181- நபி (ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றும் போது முதலாவதாகத் தங்கள் இரு முன் கைகளையும் கழுவுவார்கள். பின்னர் தொழுகைக்கு உளூ செய்வது போல் உளூ செய்வார்கள். பின்னர் விரல்களைத் தண்ணீரில் முக்கி அதைக் கொண்டு தலை முடியின் அடிப்பாகத்தைக் கோதி விடுவார்கள். பின்னர் அவர்கள் தலை மீது மூன்று முறை கையினால் தண்ணீரால் கோரி ஊற்றுவார்கள் பின்னர் தங்கள் உடல் முழுவதும் தண்ணீரை ஊற்றுவார்கள்.

புஹாரி248: ஆயிஷா (ரலி)

## 129.கடமையான குளிப்பின் முறை

182- நான் நபி (ஸல்) அவர்கள் குளிப்பதற்கு தண்ணீர் ஊற்றினேன் அவர்கள் தமது வலக்கரத்தால் தமது இடது கையில் தண்ணீரை ஊற்றி இரு கைகளையும் கழுவினார்கள். தமது மர்மஸ்தலத்தைக் கழுவினார்கள். தமது கையைப் பூமியில் மண் கொண்டு தேய்த்துக் கழுவினார்கள். வாய் கொப்பளித்து மூக்கிற்குத் தண்ணீர் செலுத்தினார்கள் பின்னர் தமது முகத்தைக் கழுவினார்கள். மேலும் தமது தலை மீது தண்ணீர் ஊற்றினார்கள் பின்னர் சிறிது ஒதுங்கி நின்று தமது இரு கால்களையும் கழுவினார்கள். அவர்களிடத்தில் துவாலை கொடுக்கப்பட்டது. ஆனால் அவர்கள் அதில் துடைக்கவில்லை.

புஹாரி259: மைமூனா (ரலி)

183- நபி (ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றும் போது ஹிலாப் பாத்திரம் போன்ற ஒன்றை கொண்டுவரச் சொல்லி அதிலிருந்து தமது கையில்

அள்ளித் தமது தலையின் வலப்புறம் ஊற்றுவார்கள். பின்னர் தமது இரு கைகளால் தலையைத் தேய்ப்பார்கள்.

புஹாரி258: ஆயிஷா (ரலி)

## 130. குளிக்கும் நீரின் அளவு...

184-ஃபரக் என்ற ஒரு பாத்திரத்திலிருந்து நானும் நபி (ஸல்) அவர்களும் சேர்ந்து குளித்தோம். (ஃபரக் என்பது இரு கை கொள்ளளவு தண்ணீரின் பண்ணிரண்டு மடங்காகும்)

புஹாரி250: ஆயிஷா (ரலி)

185- நானும் ஆயிஷா (ரலி) அவர்களுடைய சகோதரரும் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றிருந்தோம். அவர்களிடம் அவர்களுடைய சகோதரர் நபி (ஸல்) அவர்களுடைய குளிப்பு எப்படியிருந்தது? என்று கேட்டார். ஆயிஷா (ரலி) ஸாவு, போன்ற ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வரச் சொல்லிக் குளித்தார்கள். தமது தலை மீது தண்ணீரை ஊற்றினார்கள் அவர்களுக்கும் எங்களுக்குமிடையில் ஒரு திரை இருந்தது.

புஹாரி251: அபூஸலமா (ரலி)

186- நபி (ஸல்) அவர்கள் நான்கு முத்துவிலிருந்து ஐந்து முத்துவரை உள்ள தண்ணீரில் குளிப்பார்கள் ஒரு முத்து அளவு தண்ணீரில் உளூச் செய்வார்கள்" .

புஹாரி251: அனஸ்(ரலி)

## 131. மூன்று முறை தலைக்கு நீர் ஊற்றுதல்...

187- நானோ மூன்று முறை எனது தலையில் தண்ணீரை ஊற்றுவேன் இதை அறிவிக்கும் ஜுபைர் பின் முத்யிம் (ரலி) நபி (ஸல்) அவர்கள் தாங்கள் இரு கைகளால் சைகை செய்து காட்டினார்கள் என்று குறிப்பிட்டார்கள்.

புஹாரி254: ஜுபைர் பின் முத்யிம் (ரலி)

188- ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி) அவர்களுடன் நானும் என்னுடைய தந்தையும் வேறு சிலரும் அமர்ந்திருந்தோம். அப்போது அவர்களிடத்தில் குளிப்பைப் பற்றிப் கேட்டோம். அதற்கு ஒரு ஸாவு அளவு தண்ணீர் போதும்

என்று சொன்னார்கள். அப்போது ஒரு மனிதர் அந்தத் தண்ணீர் எனக்குப் போதாது என்றார். உன்னை விடச் சிறந்த, உன்னை விட அதிகமான முடிவைத்திருந்த நபி (ஸல்) அவர்களுக்கு அந்த அளவு தண்ணீர் போதுமானதாக இருந்தது எனக் கூறினார்கள். பின்னர் ஒரே ஆடையை அணிந்தவர்களாக எங்களுக்குத் தொழுகை நடத்தினார்கள்.

புஹாரி252: அபூ ஜஃபர் (ரலி)

## 132. மாதவிடாய் பெண் எவ்வாறு சுத்தம் செய்வது...

189- ஒரு பெண், நபி (ஸல்) அவர்களிடம் வந்து மாதவிடாய் நின்றபின் எப்படிக் குளிக்க வேண்டும்? என வினவினார். நபி (ஸல்) அவர்கள் அவள் குளிக்கும் முறையை அவளுக்கு கூறிவிட்டு கஸ்தூரி வைக்கப்பட்ட பஞ்சை எடுத்து அதனால் சுத்தம் செய், எனக் கூறினார்கள். அப்பொது அப்பெண் நான் எப்படி சுத்தம் செய்ய வேண்டும்? எனக் கேட்டார். அதைக் கொண்டு நீ சுத்தம் செய் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மீண்டும் அந்தப் பெண் எப்படி? என்று கேட்ட போது ஸூப்ஹானல்லாஹ்! சுத்தம் செய்து கொள்! எனக் கூறினார்கள். உடனே நான் அந்தப் பெண்ணை என் பக்கம் இழுத்து கஸ்தூரி கலந்த பஞ்சைக் கொண்டு இரத்தம் பட்ட இடத்தில் வைத்துச் சுத்தம் செய் என அவளுக்குக் கூறினேன்.

புஹாரி314: ஆயிஷா (ரலி)

## 133.தொடர் இரத்தப்போக்கு உள்ள பெண் பற்றி...

190- அபூ ஹூபைஷ் என்பாரின் மகள் பாத்திமா என்ற பெண் நபி (ஸல்) அவர்களிடம் வந்து அல்லாஹ்வின் தூதரே! நான் அதிகமாக இரத்தப் போக்கு ஏற்படும் ஒரு பெண். (அதிலிருந்து) நான் சுத்தமாவதில்லை. எனவே நான் தொழுகையை விட்டு விடலாமா? எனக் கேட்டார். அதற்கு இல்லை! அது ஒரு வித நோயால் ஏற்படுவதாகும். அது மாதவிடாய் இரத்தமன்று. உனக்கு மாதவிடாய் வரும்போது தொழுகையை விட்டு விடு. அது நின்று விட்டால் இரத்தம் பட்ட இடத்தை கழுவிவிட்டுத் தொழுகையை நிறைவேற்று என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும் நபி (ஸல்) அவர்கள் அப்பெண்ணிடம்

பின்னர் அடுத்த மாதவிடாய் வரும்வரை ஒவ்வொரு தொழுகைக்கும் நீ உளூ செய்து கொள் என்றும் சொன்னார்கள்.

புஹாரி228: ஆயிஷா (ரலி)

191- உம்மு ஹபீபா என்ற பெண் ஏழு வருடங்கள் உதிரப் போக்குடையவராக இருந்தார். இது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கேட்ட போது, குளிக்குமாறு அவர்களிடம் கட்டளையிட்டு, இது நோய் எனக் கூறினார்கள். ஒவ்வொரு தொழுகைக்கும் அப்பெண்மணி குளிப்பவராக இருந்தார்.

புஹாரி327: ஆயிஷா (ரலி)

## 134. மாதவிடாயில் விடுபட்ட தொழுகையை...

192- ஒரு பெண் ஆயிஷா (ரலி)விடம் பெண்கள் மாதவிடாயிலிருந்து சுத்தமான பின் தொழுவதால் மட்டும் போதுமானதா? (அல்லது விடுபட்ட தொழுகையையும் தொழ வேண்டுமா?) என்று கேட்டபோது நீ (காரிஜியாக்களின் பிறப்பிடமான) ஹரூர் என்னுமிடத்தைச் சார்ந்த பெண்ணா? நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருக்கும் போது எங்களுக்கு மாதவிடாய் ஏற்படும். எங்களிடம் விடுபட்ட தொழுகையை தொழுமாறு ஏவமாட்டார்கள் - அத்தொழுகையை நாங்கள் தொழமாட்டோம் என்று ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

புஹாரி321: முஆதா (ரலி)

## 135.குளிக்கும்போது திரையிட்டு கொள்ளுதல்..

193- மக்கா வெற்றி கொள்ளப்பட்ட ஆண்டு நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்றிருந்தேன். அப்போது அவர்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய மகள் ஃபாத்திமா (ரலி) நபி (ஸல்) அவர்களுக்குத் திரையிட்டார்கள். நான் நபி (ஸல்) அவர்களுக்கு ஸலாம் சொன்னேன். அப்போது யாரவர்? எனக் கேட்டார்கள். நான் அபூதாலிபின் மகள் உம்முஹானி என்றேன். உடனே உம்முஹானியே! வருக! எனக் கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் குளித்து முடித்தபின் ஒரே ஆடையைச் சுற்றிக் கொண்டவர்களாக எட்டு ரக்அத்கள் தொழுதார்கள். அவர்கள் தங்கள் தொழுகையை முடித்துக் கொண்டதும் அல்லாஹ்வின் தூதரே! என்னுடைய சகோதரர் நான் அடைக்கலம்

அளித்திருக்கும் ஹுபைராவின் மகனைக் கொலை செய்ய எண்ணியுள்ளார் என்று கூறினேன். அப்போது உம்முஹானியே! நீ யாருக்கு அடைக்கலம் அளித்திருக்கிறாயோ அவருக்கு நாங்களும் அடைக்கலம் அளிக்கிறோம், என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். இச்சம்பவம் முற்பகலில் நடந்தது.

புஹாரி357: உம்மு ஹானி (ரலி)

## 136. தனிமையில் நிர்வாணமாகக் குளித்தல் பற்றி...

194- இஸ்ரவேலர்கள் ஒருவரை ஒருவர் பார்த்தவர்களாக, நிர்வாணமாகவே குளிப்பார்கள். மூஸா (அலை) அவர்கள் தனித்தே குளிப்பார்கள். இதனால் அல்லாஹ்வின் மீதாணையாக மூஸா விரை வீக்கமுடையவர் எனவே அவர் நம்முடன் சேர்ந்து குளிப்பதில்லை என இஸ்ரவேலர்கள் கூறிக் கொண்டார்கள். ஒரு முறை மூஸா (அலை) அவர்கள் குளிப்பதற்காகச் சென்றபோது, தமது ஆடைகளை ஒரு கல்லின் மீது வைத்து விட்டுக் குளிக்கச் சென்றார்கள். அவர்களுடைய ஆடையோடு அந்தக் கல் ஓடி விட்டது. உடனே மூஸா (அலை) அவர்கள் அதைத் தொடர்ந்து கல்லே! எனது ஆடை! என்று சப்தமிட்டுக் கொண்டு சென்றார்கள். அப்போது இஸ்ரவேலர்கள் மூஸா (அலை) அவர்களின் மர்மஸ்தலத்தைப் பார்த்து விட்டு அல்லாஹ்வின் மீது ஆணையாக மூஸாவிற்கு எந்தக் குறையுமில்லை என்று கூறினார்கள். மூஸா (அலை) அவர்கள் தமது ஆடையை எடுத்துக் கொண்டு அந்தக் கல்லை அடிக்க ஆரம்பித்தார்கள். மேலும் அல்லாஹ்வின் மீது ஆணையாக மூஸா (அலை) அவர்கள் கல்லைக் கொண்டு அந்தக் கல்லின் மீது ஆறோ ஏழோ அடி அடித்தார்கள். என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி278: அபூஹுரைரா (ரலி)

## 137. மறைவிடங்களைப் பேணுதல் பற்றி...

195- (நபி (ஸல்) அவர்கள் சிறு பிராயத்தில்) கஃபத்துல்லாஹ்வின் கட்டுமானப்பணி நடக்கும் போது அதைக் கட்டுபவர்களோடு கற்களை எடுத்துச் சென்றார்கள். அப்போது அவர்கள் ஒரு வேஷ்டி அணிந்திருந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தை அப்பாஸ் (ரலி) என் சகோதரரின் மகனே! உன்

வேஷ்டியை அவிழ்த்து அதை உன் தோள் மீது வைத்து அதன் மேல் கல்லை எடுத்துச் சுமந்து கொண்டு வரலாமே, என நபி (ஸல்) அவர்களிடம் கூறினார்கள். அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் வேட்டியை அவிழ்த்து அதைத் தமது தோள் மீது வைத்தார்கள். வைத்ததும் அவர்கள் மயக்கமுற்றுக் கீழே விழுந்து விட்டார்கள். அதற்கு பின் நபி (ஸல்) அவர்கள் நிர்வாணமாக ஒரு போதும் காட்சியளிக்கவில்லை.

புஹாரி364: ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி)

## 138. உடலுறவுக்குப் பின் குளிப்பு அவசியம்....

### சட்ட மாற்றத்திற்கு முன்

196- நபி (ஸல்) அவர்கள் அன்சாரித் தோழர்களில் ஒருவரை அழைத்து வருமாறு ஆளனுப்பினார்கள். தலையிலிருந்து தண்ணீர் சொட்டும் நிலையில் அவர் வந்தார். இதைக் கண்ட நபி (ஸல்) அவர்கள் நாம் உம்மை அவசரப்படுத்தி விட்டோம் போலும்? என்றார்கள். அதற்கு அவர் ஆம் என்றார். நீர் (மனைவியோடு உடலுறவு கொள்ளும்போது) அவசரப்பட்டு எடுத்து விடுவீரானால் அல்லது இந்திரியம் வெளியாகாமலிருந்தால், அதற்காக நீர் உளூ செய்ய வேண்டும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (இச்சட்டம் பின் மாற்றப்பட்டது)

புஹாரி180: அபூ சயித் அல்குத்ரீ (ரலி)

197- நபி (ஸல்) அவர்களிடம், அல்லாஹ்வின் தூதரே! ஒருவர் தமது மனைவியிடம் உடலுறவு கொண்ட பின்னரும் இந்திரியம் வெளியாகாமலிருந்தால் அவர் மீது குளிப்புக் கடமையாகுமா? என்று கேட்டேன். அதற்கு மனைவியிடமிருந்து பட்ட இடத்தைக் கழுவவேண்டும், பின்னர் உளூ செய்து கொள்ளலாம் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். குளிப்பது தான் சிறந்தது. ஆனால் இந்த ஹதீஸ் கடைசி கட்டளையாக இருந்தது.

புஹாரி293: உபை பின் கஅப் (ரலி)

198- ஒருவர் (தம் மனைவியுடன்) உடலுறவு கொண்டு இந்திரியம் வெளியாகவில்லையானால் அவருடைய சட்டம் என்ன? என்று நான் உதுமான் (ரலி)இடம் கேட்டேன். அதற்கு அவர் தமது ஆண்குறியைக் கழுவி விட்டுத் தொழுகைக்கு செய்வது போன்று உளூ செய்ய வேண்டும். இதை நான் நபி (ஸல்) அவர்களிடமிருந்து கேட்டேன் என உதுமான் (ரலி) கூறினார்கள்.

**புஹாரி179: ஸைத் பின் காலித் (ரலி)**

## 139. சட்ட மாற்றத்திற்குப் பின்....

199- ஒருவர் தமது மனைவியின் (இரு கால், இரு கை,ஆகிய) நான்கு கிளைகளுக்கிடையில் அமர்ந்து, அவளுடன் உடலுறவு கொள்வாராயின் அவர் மீது குளிப்புக் கடமையாகிறது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி291: அபூஹுரைரா (ரலி)**

## 140. சமைத்த இறைச்சி உணவை உண்டால்..

200- நபி (ஸல்) அவர்கள் (சமைக்கப்பட்ட) ஒரு ஆட்டின் தொடைப்பகுதி இறைச்சியைச் சாப்பிட்ட பின் உளூ செய்யாமலே தொழுதார்கள்.

**புஹாரி207: அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி)**

201- நபி (ஸல்) அவர்கள் ஆட்டின் தொடை இறைச்சியை வெட்டி சாப்பிட்டுக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். அப்போது தொழுகைக்காக அழைக்கப்பட்டது. உடனே கத்தியைப் போட்டு விட்டுத் தொழுதார்கள். உளூ செய்யவில்லை.

**புஹாரி208: அம்ர் பின் உமய்யா (ரலி)**

202- நபி (ஸல்) அவர்கள் என் வீ ட்டில் ஆட்டுத் தொடை இறைச்சியைச் சாப்பிட்டார்கள். பின்னர் (அதற்காக) உளூ செய்யாமலே தொழுதார்கள்.

**புஹாரி210: மைமூனா (ரலி)**

203- நபி (ஸல்) அவர்கள் பால் குடித்ததால் வாய்கொப்பளித்து விட்டு, அதிலே கொழுப்பு இருக்கிறது என்று கூறினார்கள்.

**புஹாரி211: இப்னு அப்பாஸ் (ரலி)**

## 141. காற்றுப் பிரிந்தால் உளூசெய்க...

204- தொழும்போது காற்றுப் பிரிவது போன்ற உணர்வு ஏற்படுவதாக நான் நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் நாற்றத்தை உணரும் வரை அல்லது சப்தத்தைக் கேட்கும் வரை தொழுகையிலிருந்து திரும்ப வேண்டாம் என்றார்கள்.

**புஹாரி137: அப்துல்லாஹ் பின் ஸைத் பின் ஆஸிம் (ரலி)**

## 142.செத்த ஆட்டின் தோலைப் பதனிடுக...

205- மைமூனா (ரலி) அவர்களின் அடிமைப் பெண்ணுக்கு தர்மம் வழங்கப்பட்ட ஓர் ஆடு செத்துக் கிடந்ததைக் கண்ட நபி (ஸல்) அவர்கள், இதன் தோலை நீங்கள் பயன் படுத்தியிருக்கக் கூடாதா? என்று கேட்டார்கள். இது செத்ததாயிற்றே! எனத் தோழர்கள் கூறியதும், இதை உண்பது தான் தடுக்கப்பட்டுள்ளது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி1492: இப்னு அப்பாஸ் (ரலி)**

## 143. தண்ணீர் இல்லாதபோது தயம்மம் செய்க..

206- நாங்கள் ஒரு பிரயாணத்தில் நபி (ஸல்) அவர்களுடன் சென்றோம். பைதாவு அல்லது தாத்துல்ஜைஸ், என்ற இடத்தை வந்தடைந்ததும் எனது கழுத்தணி அறுந்து (தொலைந்து) விட்டது. அதை தேடுவதற்காக நபி (ஸல்) அவர்களும் அவர்களுடன் மற்றவர்களும் அந்த இடத்தில் தங்கி விட்டோம். நாங்கள் தங்கிய இடத்தில் தண்ணீர் இல்லை அப்போது அபூபக்ர் (ரலி)இடம் சிலர் வந்து (உங்கள் மகளான) ஆயிஷா செய்ததை நீங்கள் பார்த்தீர்களா? நபி (ஸல்) அவர்களையும் மக்களையும் இங்கே தங்கச் செய்து விட்டார்கள். அவர்கள் தங்கிய இடத்திலும் தண்ணீர் இல்லை அவர்களுடனும் தண்ணீர் எடுத்து வரவில்லை என்று முறையிட்டனர். அபூபக்ர் (ரலி) (என்னருகே) வந்தபோது நபி (ஸல்) அவர்கள் தங்களது தலையை எனது மடி மீது வைத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களையும் மக்களையும் தங்க வைத்து விட்டாயே? அவர்கள் தங்கிய இடத்திலும் தண்ணீர் இல்லை, அவர்களிடத்திலும் தண்ணீர் இல்லை எனக் (கடிந்து) கூறினார்கள். அவர்கள் எதைச் சொல்ல அல்லாஹ் நாடினானோ

அதையெல்லாம் சொல்லி விட்டு, தங்களது கையால் எனது இடுப்பில் குத்தினார்கள். நபி (ஸல்) அவர்களின் தலை என் மடி மீது இருந்த காரணத்தினால் நான் அசையாது இருந்தேன். நபி (ஸல்) அவர்கள் காலையில் விழித்தெழுந்த போதும் தண்ணீர் கிடைக்கவில்லை அப்போது அல்லாஹ் தயம்முமுடைய வசனத்தை இறக்கினான். எல்லோரும் தயம்மும் செய்து கொண்டனர். இது பற்றிப் பின்னர் உஸைது பின் ஹுளைர் (ரலி) அபூபக்ருடைய குடும்பத்தினர்களே! உங்கள் மூலமாக ஏற்பட்ட பரக்கத்துகளில் இது முதலாவதாக இல்லை. (எத்தனையோ பரக்கத்துகள் இதற்கு முன்பும் உங்கள் மூலம் ஏற்பட்டுள்ளன) எனக் கூறினார். நான் இருந்த ஒட்டகத்தை எழுப்பி விட்டபோது அதன் அடியில் (காணாமல் போன) என் கழுத்தணி கிடந்ததைக் கண்டேன்.

புஹாரி334: ஆயிஷா (ரலி)

207- அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரலி) அபூ மூஸல் அஷ்அரி (ரலி) ஆகியோருடன் நானும் இருந்தேன். அப்போது அபூமூஸா (ரலி) அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரலி)இடம் அபூஅப்திர்ரஹ்மானே! குளிப்புக் கடமையான ஒருவருக்குத் தண்ணீர் கிடைக்காவிட்டால் அவர் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டார். தண்ணீர் கிடைக்கும் வரை அவர் தொழவேண்டியதில்லை என அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரலி) சொன்னார்கள். அதற்கு அபூ மூஸா (ரலி), நபி (ஸல்) அவர்கள் அம்மார் பின் யாஸிர் (ரலி)இடத்தில் தண்ணீர் கிடைக்காவிட்டால் தயம்மும் செய்தால் போதுமானது என்று சொன்ன செய்தியை நீர் என்ன செய்வீர் என்று கேட்டார். அதற்கு (அம்மார் (ரலி) உமர்(ரலி) இடம் அச்செய்தியைக் கூறியபோது) அதை உமர் (ரலி) ஏற்றுக் கொள்ளவில்லை என்பது உமக்குத் தெரியாதா? என்று அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரலி) பதில் கூறினார்கள். அப்போது அம்மார் (ரலி) அறிவிப்பதை விட்டு விடுங்கள். தண்ணீர் கிடைக்காவிட்டால் தயம்மும் செய்து கொள்ளுங்கள் என்ற இந்த இறைவசனத்தை என்ன செய்வீர்கள் என்று அபூமூஸா (ரலி) கேட்டார்கள். அதற்கு இந்த விஷயத்தில் நாம் அவர்களுக்கு அனுமதி வழங்கி விட்டால் யாருக்காவது தண்ணீர் கொஞ்சம் குளிராகத் தெரிந்தால் அதில் உளூ செய்வதை விட்டு விட்டு தயம்மும் செய்து விடுவார்கள் என்று அப்துல்லாஹ்

பின் மஸ்வூது (ரலி) தாம் சொல்லக்கூடிய இந்த வார்த்தையின் விபரீதத்தைப் புரியாமலே சொல்லிவிட்டார்கள். இதற்காகத் தான் தயம்மும் செய்வதை அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரலி) வெறுத்திருக்கக் கூடுமோ? என ஷகீகிடம் நான் கேட்டேன். அதற்கு ஆம்! எனப் பதில் கூறினார்கள். 'என்னை ஒரு வேலைக்காக நபி (ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தபோது எனக்கு தண்ணீர் கிடைக்கவில்லை. எனவே பிராணிகள் மண்ணில் புரளுவது போன்று புரண்டேன். இச்செய்தியை நபி (ஸல்) அவர்களிடம் நான் சொன்னபோது நபி(ஸல்) அவர்கள் தங்களின் முகத்தையும் இரண்டு முன் கைகளையும் ஒரு முறை தடவிவிட்டு 'இப்படி நீர் செய்திருந்தால் அது உமக்குப் போதுமானது' என்று கூறினார்கள்' என உமர்(ரலி) அவர்களிடம் அம்மார்(ரலி) கூறியதை நீர் கேள்விப்பட்டதில்லையா' என அபூ மூஸா(ரலி) கேட்டார்" என ஷகீக்' வாயிலாக 'யஃலா' அறிவித்தார்.

## 144. ஒரு முஸ்லிம் அசுத்தம் ஆகமாட்டான்...

210- நான் குளிப்புக் கடமையான நிலையில் மதீனாவின் ஒரு தெருவில் நின்று கொண்டிருந்த சமயம் நபி (ஸல்) அவர்கள் என்னைச் சந்தித்தார்கள். அப்போது நான் நழுவி விட்டேன். குளித்து விட்டுப் பின்னர் வந்தேன். நபி (ஸல்) அவர்கள் அபூஹுரைரா! எங்கு நழுவி விட்டீர்? என்று கேட்டார்கள். குளிப்புக் கடமையாகியிருந்தேன். எனவே நான் சுத்தமில்லாமல் உங்கள் அருகே அமர்வதை வெறுத்தேன் எனக் கூறினேன். அப்போது ஸுப்ஹானல்லாஹ்! நிச்சயமாக ஒரு முஸ்லிம் அசுத்தமாக மாட்டான் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி283: அபூஹுரைரா (ரலி)

## 145. கழிவறை துஆ....

211- நபி (ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்கு நுழையும்போது, இறைவா! அறுவருக்கத் தக்க செயல்கள், இழிவான பண்பாடுகள் ஆகியவற்றைத் தூண்டும் ஷைத்தானை விட்டு உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன் என்று கூறும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள்.

புஹாரி142: அனஸ் (ரலி)

## 146. தூக்கம்...

212- தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்ட பின் நபி (ஸல்) அவர்கள் பள்ளியின் பக்கத்தில் ஒரு மனிதரோடு இரகசியமாக உரையாடிக் கொண்டிருந்தார்கள். தொழுகைக்கு வராமல் நீண்ட நேரம் அவர்கள் பேசிக் கொண்டிருந்ததால் மக்கள் தூங்கி விட்டனர்.

புஹாரி642: அனஸ் (ரலி)

## 147. பாங்கு எப்படி வந்தது?

213- முஸ்லீம்கள் (மக்காவிலிருந்து) மதீனாவிற்கு வந்த போது தொழுகைக்கு அழைப்புக் கொடுக்கப்படுவதில்லை. அவர்கள் ஒன்று கூடி நேரத்தை முடிவு செய்து கொள்வார்கள். ஒரு நாள் இது பற்றி எல்லோரும் கலந்தாலோசித்தனர். அப்போது சிலர், கிருத்தவர்களைப் போன்று மணி அடியுங்கள் என்றனர். வேறு சிலர் யூதர்கள் வைத்திருக்கின்ற கொம்பைப் போன்று நாமும் கொம்பூதலாமே என்றனர். அப்போது உமர் (ரலி) தொழுகைக்காக அழைக்கின்ற ஒருவரை ஏன் ஏற்படுத்தக்கூடாது? என்று கூற உடனே பிலால் (ரலி) அவர்களிடத்தில் பிலாலே! எழுந்து தொழுகைக்காக அழையும் என நபி (ஸல்) கூறினார்கள்.

புஹாரி604:இப்னு உமர் (ரலி)

214- (தொழுகைக்காக மக்களை அழைப்பது பற்றி ஆலோசனை நடந்த போது) சிலர் நெருப்பை மூட்டுவோம் என்றார். சிலர் மணி அடிப்பதன் மூலம் அழைக்கலாம் என்றனர். அவையெல்லாம் யூத, கிறித்தவ கலாச்சாரம் என்று (சிலரால் மறுத்துக்) கூறப்பட்டது. அப்போது பாங்கின் வாசகங்களை இரட்டை இரட்டையாகவும் இகாமத்தை ஒற்றைப் படையாகவும் கூறுமாறு பிலால் (ரலி) ஏவப்பட்டார்கள்.

புஹாரி603: அனஸ் (ரலி)

## 148. பாங்குக்கு பதில் எப்படி கூறுவது?

215- பாங்கு சொல்லப்படுவதை நீங்கள் செவியுற்றால் முஅத்தின் சொல்வது போல் நீங்களும் சொல்லுங்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி611: அபூஸயீதுல் குத்ரி (ரலி)

## 149. பாங்கொலியில் ஷைத்தான் ஓட்டமெடுப்பது

216- தொழுகைக்காக (பாங்கு என்ற) அழைப்புக் கொடுக்கப்படும் போது, பாங்கு சப்தத்தை கேட்ககூடாது என்பதற்காகச் சப்தமாகக் காற்றுப் பிரிந்தவனாக ஷைத்தான் புறமுதுகு காட்டி ஓடுகிறான். பாங்கு சொல்லி முடித்ததும் வருகிறான் தொழுகைக்கு இகாமத் கூறும்போதும் ஓடுகிறான். இகாமத் சொல்லி முடித்ததும் முன்னோக்கி வந்து தொழுகையாளிக்கும் அவருடைய மனதிற்குமிடையில் இருந்துக்கொண்டு தொழுகையாளி அதற்கு முன்புவரை நினைத்திராத விஷயங்களையெல்லாம் அவருக்கு நினைவூட்டி, இதை நீ நினைத்துப்பார்; அதை நீ நினைத்துப்பார் என்று சொல்லிக் கொண்டு இருப்பான். தொழுகையாளி தாம் எத்தனை ரக்அத்கள் தொழுதோம் என்று சந்தேகம் ஏற்படும் அளவிற்கு ஷைத்தான் அவ்வாறு செய்து கொண்டிருப்பான் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி608: அபூஹுரைரா (ரலி)

## 150. தொழுகையில் கைகளை தோள் வரை உயர்த்துதல்..

217- நபி (ஸல்) அவர்கள் தொழுகையைத் துவங்கும் போதும் ருகூவுக்காகத் தக்பீர் கூறும் பொதும் ருகூவிலிருந்து தலையை உயர்த்தும் போதும் தமது தோள்களுக்கு நேராகவும் தம் கைகளை உயர்த்துவார்கள். ருகூவிலிருந்து உயரும் போது ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா, ரப்பனா வலகல்ஹம்து என்று கூறுவார்கள். ஸஜதாவுக்குச் செல்லும் போது இவ்வாறு செய்ய மாட்டார்கள்.

புஹாரி735: அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)

218- மாலிக் பின் அல் ஹுவைரிஸ் (ரலி) தொழும் போது தக்பீர் கூறித் தம் கைகளை உயர்த்தினார்கள். ருகூவுக்குச் செல்லும் போது தம் கைகளை உயர்த்தினார்கள். ருகூவிலிருந்து தலையை உயர்த்தும் போதும் தம் கைகளை உயர்த்தினார்கள். நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு செய்யுதுள்ளதாகவும் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

புஹாரி737: அபூ கிலாஃபா (ரலி)

## 151. ருகூஉ ஸஜ்தாவில் என்ன கூறுவது...

219- குனியும் போதும் நிமிரும் போதும் தக்பீர் கூறி அபூஹுரைரா (ரலி) தொழுவித்துவிட்டு நான் உங்களுக்கு நபி (ஸல்) அவர்களின் தொழுகை போலவே தொழுது காட்டினேன் என்றும் கூறினார்கள்.

**புஹாரி785: அபூ ஸலமா**

220- நபி (ஸல்) அவர்கள் தொழுகையைத் துவக்கும் போது தக்பீர் கூறுவார்கள். ருகூவு செய்யும் போதும் தக்பீர் கூறுவார்கள். ருகூவிலிருந்து முதுகை நிமிர்த்தும் போது ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்று கூறுவார்கள். பின்பு நிலைக்கு வந்து ரப்பனா லகல் ஹம்து- மற்றொரு அறிவிப்பில் வலகல் ஹம்து என்பார்கள். பின்பு (ஸஜ்தாவுக்காகக்) குனியும் போதும் தக்பீர் கூறுவார்கள். பின்பு தலையை (ஸஜ்தாவிலிருந்து) உயர்த்தும் போதும் தக்பீர் கூறுவார்கள். பின்பு (இரண்டாவது) ஸஜ்தாச் செய்யும் போதும் தக்பீர் கூறுவார்கள். பின்பு அதிலிருந்து தலையை உயர்த்தும் போதும் தக்பீர் கூறுவார்கள். இவ்வாறே தொழுகையின் எல்லா ரக்அத்களிலும் செய்வார்கள். இரண்டாம் ரக்அத்திலிருந்து எழும் போதும் தக்பீர் கூறுவார்கள்.

**புஹாரி789: அபூஹுரைரா (ரலி)**

221- நானும் இம்ரான் இப்னு ஹுஸைனும் அலி (ரலி)யைப் பின் பற்றித் தொழுதோம். அலி (ரலி) ஸஜ்தாச் செய்யும் போதும் தக்பீர் கூறினார்கள். ஸஜ்தாவிலிருந்து தலையை உயர்த்தும் போதும் தக்பீர் கூறினார்கள். இரண்டு ரக்அத்தை முடித்து எழும் போதும் தக்பீர் சொன்னார்கள். தொழுகையை முடித்து பிறகு என் கையைப் பிடித்துக் கொண்டு இவர் நபி (ஸல்) அவர்களின் தொழுகையை எனக்கு நினைவுபடுத்தி விட்டார் என்று இம்ரான் (ரலி) குறிப்பிட்டார்கள்.

**புஹாரி 786: முதர்ரிஃப் (ரலி)**

## 152. தொழுகையில் ஸூரா ஃபாத்திஹா ஓதுவது...

222.திருக்குர்ஆனின் தோற்றுவாயை (அல்ஹம்து ஸூராவை) ஓதாதவருக்குத் தொழுகை கூடாது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி756: உபாதா பின் ஸாமித் (ரலி)**

223- எல்லாத் தொழுகைகளிலும் ஓதப்படவேண்டும் என நபி ஸல்) அவர்கள் எங்களுக்குக் கேட்கும் விதமாக ஒதியவற்றை உங்களுக்குக் கேட்கும் விதமாக ஒதுகிறோம். நபி (ஸல்) அவர்கள் சப்தம் இன்றி ஒதியதை நாங்களும் சப்தமின்றி ஒதுகின்றோம். அல்ஹம்து அத்தியாயத்தை மட்டும் ஒதினால் அது போதுமாகும். அதை விட அதிகமாக ஒதினால் அது சிறந்ததாகும்.

புஹாரி772: அபூஹுரைரா (ரலி)

224- நபி (ஸல்) அவர்கள் பள்ளிக்கு வந்தார்கள். ஒரு மனிதரும் (அந்த நேரத்தில்) பள்ளிக்கு வந்து தொழலானார். (தொழுது முடித்ததும்) நபி (ஸல்) அவர்களுக்கு அவர் ஸலாம் கூறினார். நபி (ஸல்) அவர்கள் பதில் ஸலாம் கூறினார்கள். பின்பு திரும்பவும் நீர் தொழுவீராக நீர் தொழவே இல்லை என்றும் கூறினார்கள். அந்த மனிதர் முன்பு தொழுதது போலவே மீண்டும் தொழுதுவிட்டு வந்து நபி (ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறினார். திரும்பவும் தொழுவீராக நீர் தொழவே இல்லை என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (இவ்வாறு மூன்று தடவை நடந்தது) அதன் பிறகு அந்த மனிதர் சத்திய மார்க்கத்துடன் உங்களை அனுப்பியுள்ள இறைவன் மீது ஆணையாக இவ்வாறு தொழுவதைத் தவிர வேறு எதையும் நான் அறிந்திருக்கவில்லை! எனவே எனக்கு கற்றுத் தாருங்கள்! என்று கேட்டார். நீர் தொழுகைக்காக நின்றதும் தக்பீர் கூறுவீராக பின்னர் குர்ஆனில் உமக்குத் தெரிந்தவற்றை ஓதவீராக பின்னர் ருகூவிலிருந்து எழுந்து சரியான நிலைக்கு வருவீராக பின்னர் நிதானமாக ஸஜ்தாச் செய்வீராக ஸஜ்தாவிலிருந்து எழுந்து நிதானமாக உட்கார்வீராக இவ்வாறே உமது எல்லாத் தொழுகையிலும் செய்து வருவீராக என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி793: அபூஹுரைரா (ரலி)

## 153. தொழுகையில் பிஸ்மில்லாஹ் சப்தமின்றி கூறுவது..

225- நபி (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) உமர் ரலி) ஆகியோரும் அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன் என்றே தொழுகையைத் துவக்குபவர்களாக இருந்தனர்.

புஹாரி743: அனஸ் (ரலி)

## 154. தொழுகையில் தஷஹ்ஹுது எனும் நிலை..

226. நபி (ஸல்) அவர்களுடன் (அவர்களைப் பின்பற்றித்) தொழும்போது அஸ்ஸலாமு அலல்லாஹி கப்ல இபாதிஹி அஸ்ஸலாமு அலா ஜிப்ரீல, அஸ்ஸலாமு அலா மீகாயீல, அலா ஃபுலானின் வ ஃபுலானின் (அடியார்களுக்கு முன் அல்லாஹ்வுக்கு முகமன் உண்டாகட்டும். (வானவர்) ஜிப்ரீல் மீது சாந்தி உண்டாகட்டும். இன்னார் இன்னார் மீது சாந்தி உண்டாகட்டும் என்று கூறிவந்தோம். நபி (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் எங்களை நோக்கித் திரும்பி 'நிச்சயமாக அல்லாஹ்வே ஸலாம் (சாந்தியளிப்பவன்) ஆக இருக்கின்றான். ஆகவே உங்களில் ஒருவர் தொழுகையின் இருப்பில் இருக்கும் போது அத்தஹியாத்து லில்லாஹி வஸ்ஸலவாத்து, வத்தய்யிபாத்து அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹந் நபிய்யு வ ரஹ்மத்துல்லாஹி வ பரக்காத்துஹூ அஸ்ஸலாமு அலைனா வலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன் (சொல் செயல் பொருள் சார்ந்த எல்லாக் காணிக்கைகளும் வணக்கங்களும் பாராட்டுகளும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே! உங்கள் மீது சாந்தியும் அல்லாஹ்வின் அருளும் சுபிட்சமும் ஏற்படட்டுமாக! எங்கள் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் அனைவர் மீதும் சாந்தி உண்டாகட்டும்) என்று கூறட்டும். இதை நீங்கள் கூறினாலே வானம் மற்றும் பூமியில் உள்ள அனைத்து நல்லடியார்களுக்கும் ஸலாம் கூறியதாக அமையும். அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹூ வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹூ வரஸூலுஹூ (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று நான் உறுதி கூறுகிறேன். மேலும் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் உறுதி கூறுகிறேன்) என்றும் கூறட்டும். பிறகு தாம் நாடிய பிரார்த்தனையை ஓதிக்கொள்ளலாம் என்று சொன்னார்கள்.

**புஹாரி 6230: அப்துல்லாஹ் பின் மஸ்வூத் (ரலி)**

## 155. நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்து கூறுதல்..

227- என்னை கஅப் பின் உஜ்ரா (ரலி) அவர்கள் சந்தித்து நபி (ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்ற ஓர் அன்பளிப்பை உனக்கு நான் வழங்கட்டுமா? என்று கேட்டார்கள். நான் ஆம் அதை எனக்கு வழங்குங்கள்

என்று பதில் சொன்னேன். உடனே அவர்கள் நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தங்கள் மீதும் தங்கள் குடும்பத்தார் மீதும் ஸலவாத்து சொல்வது எப்படி? (என்று எங்களுக்குக் கற்றுக் கொடுங்கள்) ஏனெனில் தங்களுக்கு நாங்கள் ஸலாம் சொல்வது எப்படி என்று அல்லாஹ் எங்களுக்கு (தஷஹ்ஹுதில்) கற்றுக் கொடுத்திருக்கின்றான். என்று கேட்டோம். அதற்கு அவர்கள் இறைவா! இப்ராஹீம் அவர்கள் மீதும் இப்ராஹீம் அவர்களுடைய குடும்பத்தார் மீதும் நீ கருணை புரிந்ததைப் போல் முஹம்மதின் மீதும் கருணை புரிந்திடு. நீயே புகழுக்குரியவனும் கண்ணியம் மிக்கவனும் ஆவாய். இறைவா! இப்ராஹீம் அவர்கள் மீதும் இப்ராஹீம் அவர்களுடைய குடும்பத்தார் மீதும் நீ உன் அருள் வளத்தைப் பொழிந்ததைப் போல் முஹம்மதின் மீதும் முஹம்மதின் குடும்பத்தார் மீதும் உன் அருள்வளத்தைப் பொழிந்திடு, நீயே புகழுக்குரியவனும் கண்ணியம் மிக்கவனும் ஆவாய் என்று சொல்லுங்கள் என பதிலளித்தார்கள்.

புஹாரி 3370: அப்துர் ரஹ்மான் பின் அபிலைலா (ரஹ்)

228- மக்கள் நபி (ஸல்) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே! உங்கள் மீது நாங்கள் எப்படி ஸலவாத்து சொல்வது? என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வ அஸ்வாஜிஹி வ துர்ரியத்திஹி கமா ஸல்லய்த்த அலா ஆலி இப்ராஹீம இன்ன(க்)க ஹமீதுன் மஜீத் இறைவா! இப்ராஹீம் அவர்களுடைய குடும்பத்தார் மீது நீ கருணை புரிந்ததைப் போன்று முஹம்மத் அவர்கள் மீதும் அவர்களுடைய மனைவிமார்கள் மற்றும் அவர்களுடைய சந்ததிகள் மீதும் கருணை புரிவாயாக! இப்ராஹீம் (அலை) அவர்களுடைய குடும்பத்தார் மீது நீ உன் அருள் வளத்தைப் பொழிந்ததைப் போன்று முஹம்மதின் மீதும் அவர்களுடைய மனைவிமார்கள் மீதும் அவர்களுடைய சந்ததிகள் மீதும் உன் அருள் வளத்தைப் பொழிவாயாக! நிச்சயம் நீயே புகழுக்குரியவனும் கண்ணியம் நிறைந்தவனும் ஆவாய் என்று சொல்லுங்கள் என பதிலளித்தார்கள்.

புஹாரி 3369: அபூ ஹுமைத் அஸ்ஸாஇதி (ரலி)

## 156. தொழுகையில் அல்லாஹ்வைப் புகழ்தல்..

229-'இமாம் 'ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா' என்று கூறும்போது நீங்கள் 'அல்லாஹும்ம ரப்பனா லகல் ஹம்து' எனக் கூறுங்கள்! யாருடைய இந்தக்

கூற்று வானவர்களின் கூற்றுடன் ஒத்து அமைகிறதோ அவரின் முன்பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூஹுரைரா (ரலி) அறிவித்தார்.

**புஹாரி 796 :அபுஹுரைரா (ரலி)**

230- இமாம் ஆமீன் கூறும் போது நீங்களும் ஆமீன் கூறுங்கள்! எவர் கூறும் ஆமீன் மலக்குகள் கூறும் ஆமீனுடன் ஒத்து அமைகின்றதோ அவரது முன் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. நபி (ஸல்) அவர்கள் ஆமீன் என்று கூறுபவர்களாக இருந்தார்கள் என இப்னு ஷிஹாப் குறிப்பிடுகிறார்.

**புஹாரி780: அபூஹுரைரா (ரலி)**

231- இமாம் கைருல் மக்லூபி அலைஹிம் வலழ்ழாலீன் என்று கூறும் போது நீங்கள் ஆமீன் கூறுங்கள்! ஏனெனில் எவர் கூறும் ஆமீன் மலக்குகள் கூறும் ஆமீனுடன் ஒத்து அமைந்து விடுகின்றதோ அவரது முன் பாவங்கள் மன்னிக்கப் படுகின்றன என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி782: அபூஹுரைரா (ரலி)**

## 156. இமாமைப் பின்பற்றுபவர்கள் பற்றி..

232- நபி (ஸல்) அவர்கள் ஒரு தடவை குதிரையின் மீது ஏறிய போது கீழே விழுந்து விட்டார்கள். அதனால் அவர்ளுடைய வலது விலாப் புறத்தில் அடிபட்டது. அவர்களை நாங்கள் நோய் விசாரிக்கச் சென்றோம். தொழுகை நேரம் வந்ததும் தொழுகையை உட்கார்ந்தவாறே தொழுதார்கள். நாங்களும் (அவர்களுக்குப்பின்னால்) உட்கார்ந்தவாறு தொழுதோம். நபி (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்ததும் இமாம் பின்பற்றப்படுவதற்காகவே நியமிக்கப்பட்டுள்ளர்!; அவர் தக்பீர் கூறினால் நீங்களும் தக்பீர் கூறுங்கள்: அவர் ருகூவு செய்தால் நீங்களும் செய்யுங்கள். அவர் (தலையை) உயர்த்தினால் நீங்களும் (தலையை) உயர்த்துங்கள் அவர் ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்று சொன்னால் நீங்கள் ரப்பனா வலகல் ஹம்து என்று சொலல்லுங்கள்: அவர் ஸஜ்தாச் செய்தால் நீங்களும் ஸஜ்தாச் செய்யுங்கள் என்று கூறினார்கள்.

**புஹாரி805: அனஸ் (ரலி)**

233- நபி (ஸல்) அவர்கள் நோயுற்ற போது தங்கள் வீ ட்டிலேயே உட்கார்ந்து தொழுதார்கள். அவர்களின் பின்னால் சிலர் நின்றவாறே தொழுதார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் அவர்களை அமரும்படி சைகை செய்தார்கள். அவர்கள் தொழுது முடித்த பின்னர் இமாம் பின்பற்றப்படுவதற்காகவே நியமிக்கப்பட்டுள்ளார். அவர் ருகூவு செய்தால் நீங்களும் ருகூவு செய்யுங்கள். அவர் தலையை உயர்த்தினால் நீங்களும் தலையை உயர்த்துங்கள் . அவர் உட்கார்ந்து தொழுதால் நீங்களும் உட்கார்ந்து தொழுங்கள் என்று கூறினார்கள்.

புஹாரி688: ஆயிஷா (ரலி)

234- இமாம் ஏற்படுத்தப்பட்டிருப்பது பின்பற்றப்படுவதற்கே எனவே அவர் தக்பீர் கூறும்போது நீங்களும் தக்பீர் கூறுங்கள். அவர் ருகூவு செய்யும்போது நீங்களும் ருகூவு செய்யுங்கள். அவர் ஸமியல்லாஹூ லிமன் ஹமிதா எனக் கூறும் போது நீங்கள் ரப்பனா வலக்கல் ஹம்து எனக் கூறுங்கள். அவர் ஸஜ்தாச் செய்யும் போது நீங்களும் ஸஜ்தாச் செய்யுங்கள். அவர் உட்கார்ந்து தொழுவிக்கும் போது நீங்களும் அவரோடு சேர்ந்து உட்கார்ந்து தொழுங்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி734: அபூஹுரைரா (ரலி)

## 157.இமாமத் செய்ய இமாம் மற்றொருவரை நியமித்தல்....

235- நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று 'நபி (ஸல்) அவர்கள் நோயுற்றபோது நடந்த நிகழ்ச்சியை எனக்குச் சொல்வீ ர்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள் 'ஆம்! நபி (ஸல்) அவர்களுக்கு நோய் கடுமையானபோது 'மக்கள் தொழுதுவிட்டார்களா?' என்று கேட்டார்கள். இல்லை, அவர்கள் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கூறினோம். அப்போது 'பாத்திரத்தில் எனக்குத் தண்ணீ ர் வையுங்கள் என்றார்கள். அவ்வாறே நாங்கள் தண்ணீ ர் வைத்தோம். அதில் அவர்கள் குளித்துவிட்டு எழுந்திருக்க முயன்றார்கள். அப்போது அவர்கள் மயங்கி விழுந்துவிட்டார்கள். பின்னர் அவர்களின் மயக்கம் தெளிந்தபோது, 'மக்கள் தொழுதுவிட்டார்களா?' என்று கேட்டார்கள். இல்லை அவர்கள் உங்களை எதிர்பார்த்து இருக்கிறார்கள் என்று சொன்னோம். அப்போது 'பாத்திரத்தில் எனக்குத் தண்ணீ ர் வையுங்கள் என்றார்கள். அவ்வாறே நாங்கள்

தண்ணீர் வைத்தோம் அவர்கள் உட்கார்ந்து குளித்துவிட்டு எழுந்திருக்க முயன்றார்கள். அப்போது அவர்கள் மயங்கி விழுந்துவிட்டார்கள். பின்னர் அவர்களின் மயக்கம் தெளிந்தபோது, 'மக்கள் தொழுதுவிட்டார்களா?' என்று கேட்டார்கள். இல்லை அவர்கள் உங்களை எதிர்பார்த்து இருக்கிறார்கள் என்று சொன்னோம். அப்போது 'பாத்திரத்தில் எனக்குத் தண்ணீர் வையுங்கள் என்றார்கள். அவ்வாறே நாங்கள் தண்ணீர் வைத்தோம் அவர்கள் உட்கார்ந்து குளித்துவிட்டு எழுந்திருக்க முயன்றார்கள். அப்போது அவர்கள் மயங்கி விழுந்துவிட்டார்கள். பின்னர் அவர்களின் மயக்கம் தெளிந்தபோது, 'மக்கள் தொழுதுவிட்டார்களா?' என்று கேட்டார்கள். இல்லை இறைத்தூதர் அவர்களே! அவர்கள் உங்களை எதிர்பார்த்து இருக்கிறார்கள் என்றோம். அப்போது மக்கள் பள்ளிவாசலில் இஷாத் தொழுகைக்காக நபி (ஸல்) அவர்களை எதிர்பார்த்திருந்தார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள், ஒருவரை அபூபக்ர் (ரலி) அவர்களிடம் அனுப்பி மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு கூறினார்கள். அம்மனிதர் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் வந்து 'நபி (ஸல்) அவர்கள் மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு உங்களுக்குக் கட்டளையிட்டார்கள்' என்றார்கள். அபூபக்ர் (ரலி) இளகிய உள்ளமுடையவர்களாக இருந்தார்கள். எனவே உமர் (ரலி) அவர்களிடம், 'உமரே! நீங்கள் மக்களுக்குத் தொழுகை நடத்துங்கள்' என்றார்கள். அதற்கு, நீங்கள் தாம் தகுதியானவர்கள்' என்று உமர் (ரலி) கூறிவிட்டார்கள். அபூபக்ர் (ரலி) நபி (ஸல்) அவர்கள் நோயுற்ற அந்த நாள்களிலே மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள்.

பின்னர் நபி (ஸல்) அவர்களுக்குக் கொஞ்சம் சுகம் கிடைத்தபோது, அப்பாஸ் (ரலி) மற்றும் ஒருவரின் உதவியோடு லுஹர் தொழுகைக்காக வெளியே வந்தார்கள். அப்போது அபூபக்ர் (ரலி) மக்களுக்குத் தொழுகை நடத்திக் கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் வருவதைக் கண்ட அபூபக்ர் (ரலி) தம் இடத்திலிருந்து பின் வாங்கினார்கள். அப்போது 'பின் வாங்க வேண்டாம்' என அவர்களுக்கு சைகை செய்தார்கள். தம்மை அழைத்து வந்த இருவரிடமும், 'என்னை அபூபக்ரின் அருகில் அமர்த்துங்கள்' எனக் கூறினார்கள். அவ்வாறே அவர்கள் உட்காரவும் வைத்தார்கள். நபி (ஸல்) அவர்களைப் பின்தொடர்ந்து அபூபக்ர் (ரலி) தொழுதார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களைப் பின்தொடர்ந்து மக்கள்

தொழுதார்கள். நபி (ஸல்) அவர்கள் உட்கார்ந்து தொழுதார்கள். நான் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்றிருந்தபோது, நபி (ஸல்) அவர்கள் நோயுற்றிருந்ததைப் பற்றி ஆயிஷா (ரலி) எனக்கு அறிவித்ததை நான் உங்களுக்குக் கூறவா? என்று கேட்டேன். 'அதற்கு சொல்லுங்கள்' என இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார். அப்போது ஆயிஷா (ரலி) சொன்னதை அறிவித்தேன். அதில் எதையும் அவர்கள் மறுக்கவில்லை என்றாலும், 'அப்பாஸ் (ரலி) உடன் நபி (ஸல்) அவர்களை அழைத்துச் சென்ற இன்னொரு மனிதரின் பெயரை ஆயிஷா(ரலி) சொன்னார்களா?' என்று கேட்டார்கள். இல்லை என்றேன். 'அவர் தாம் அலீ(ரலி)' எனக் கூறினார்கள்.

புஹாரி687: உபைதுல்லாஹ் (ரலி)

## 158. இமாம் தொழுகைக்கு வரப்பிந்தினால்...

243- அம்ர் பின் அவ்ப் குடும்பத்தாரிடையே சமாதானத்தை ஏற்படுத்துவதற்காக நபி(ஸல்) அவர்கள் சென்றிருந்த போது, அங்கு தொழுகையின் நேரம் வந்து விட்டது. அப்போது முஅத்தின், அபூபக்ர்(ரலி) இடம் சென்று, நான் இகாமத் சொல்லட்டுமா? நீங்கள் தொழுகை நடத்துகிறீர்களா? என்று கேட்டார். அதற்கு அபூபக்ர்(ரலி) ஆம்! என்று கூறிவிட்டுத் தொழுகை நடத்த ஆரம்பித்தார்கள். மக்கள் தொழுதுக்கொண்டிருக்கும் போது நபி(ஸல்) அவர்கள் வந்து விட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் வரிசைகளை விலக்கிக் கொண்டு முன் வரிசையில் வந்து நின்றார்கள். இதைக் கண்ட மக்கள் (இமாமுக்கு நினைவூட்டுவதற்காக) கை தட்டினார்கள். இமாமாக நின்ற அபூபக்ர்(ரலி) தம்முடைய தொழுகையில் திரும்பிப் பார்க்க மாட்டார்கள். மக்கள் அதிகமாகக் கை தட்டிய போது திரும்பிப் பார்த்தார்கள். அங்கே நபி(ஸல்) அவர்களைக் கண்டார்கள். நபி(ஸல்) அவர்கள், அபூபக்ர்(ரலி)யைப் பார்த்து, உங்களுடைய இடத்திலேயே நில்லுங்கள் என்று சைகை செய்தார்கள். தமக்கு நபி(ஸல்) அவர்கள் இந்த அனுமதியை வழங்கியதற்காக அபூபக்ர்(ரலி) தமது கைகளை உயர்த்தி அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தினார்கள். பின்னர் அபூபக்ர்(ரலி), பின் வாங்கி முன் வரிசையில் நின்றார்கள். நபி(ஸல்) அவர்கள் முன்னே சென்று தொழுகை நடத்தினார்கள். தொழுது முடித்ததும், அபூபக்ரே! நான் உங்களுக்கு கட்டளையிட்ட பின்னரும்

நீங்கள் ஏன் உங்கள் இடத்தில் நிற்காமல் பின் வாங்கி விட்டீர்கள் என்று கேட்டார்கள். அதற்கு அபூகுஹாபாவின் மகனான அபூபக்ர் அல்லாஹ்வுடைய தூதரின் முன் நின்று தொழுகை நடத்துவது சரியில்லை என அபூபக்ர்(ரலி) கூறினார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்கள் மக்களைப் பார்த்து, நீங்கள் எதற்காக அதிகமாக கை தட்டினீர்கள்? ஒருவருக்கு அவருடைய சந்தேகம் ஏற்படுமானால் அவர் சுப்ஹானல்லாஹ் என்று கூறட்டும். அவ்வாறு தஸ்பீஹ் சொல்லும் போது சொன்னவர் பக்கம் (இமாம்) திரும்பிப் பார்க்க வேண்டும். கை தட்டுவது பெண்களுக்கு தான் என்று கூறினார்கள்.

புஹாரி684: ஸஹ்ல் பின் ஸஃது அஸ்ஸாயிதி (ரலி)

## 159. தஸ்பீஹ் கூறுதலும் கை தட்டுதலும்..

244- தஸ்பீஹ் கூறுதல் ஆண்களுக்கு உரியதும் கைதட்டுதல் பெண்களுக்குரியதுமாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி1203: அபூஹுரைரா (ரலி)

## 160.தொழுகையில் பேணுதல்..

245- நான் கிப்லாத் திசையில் மட்டும் பார்க்கிறேன் என்று நீங்கள் கருதுகிறீர்களா? அல்லாஹ்வின் மீது ஆணையாக நீங்கள் அடக்கமாக இருப்பதும் உங்களின் ருகூவும் எனக்குத் தெரியாமலிருப்பதில்லை. நிச்சயமாக எனது முதுகுக்குப் பின்புறம் உங்களை நான் பார்க்கிறேன் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி418:அபூஹுரைரா (ரலி)

246- அல்லாஹ்வின் மேல் ஆணையாக ருகூவையும் ஸஜ்தாவையும் ஒழுங்காகச் செய்யுங்கள்! நான் எனக்குப் பின்புறமாக-அல்லது என் முதுகுக்குப் பின்- நீங்கள் ருகூவு செய்யும் போதும் ஸஜ்தாச் செய்யும் போதும் உங்களைப் பார்க்கிறேன் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி742: அனஸ் பின் மாலிக் (ரலி)

## 161.இமாமை முந்துதல் கூடாது..

247- உங்களில் ஒருவர் தொழுகயில் இமாமை முந்தித் தமது தலையை உயர்த்துவதால் அவருடைய தலையை கழுதையுடைய தலையாகவோ அல்லது அவருடைய உருவத்தை கழுதையுடைய உருவமாகவோ அல்லாஹ் ஆக்கி விடுவதை அஞ்சவேண்டாமா? என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி691: அபூஹுரைரா (ரலி)

## 162. ஜமாஅத் தொழுகையில் வரிசையைச் சீராக்குதல்..

248- வரிசையை ஒழுங்குப் படுத்துங்கள்! வரிசைகளை ஒழுங்குப் படுத்துவது தொழுகையை நிலைப் பெறச் செய்வதாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி723: அனஸ் (ரலி)

249- தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் எங்கள் பக்கம் முன்னோக்கி, வரிசைகளை நேராக்குங்கள்! நெருக்கமாக நில்லுங்கள்! ஏனெனில் என் முகத்துக்குப் பின்புறமாகவும் உங்களை நான் காணுகிறேன் எனக் கூறினார்கள்.

புஹாரி719: அனஸ் (ரலி)

250- உங்களது வரிசைகளை நேராக அமைத்துக் கொள்ளுங்கள். இல்லையெனில் அல்லாஹ் உங்களது முகங்களை மாற்றிவிடுவான் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி717: நுஃமான் பின் பஷீர் (ரலி)

251- பாங்கு சொல்வதற்குரிய நன்மையையும் முதல் வரிசையில் நின்று (தொழுவதற்குரிய) நன்மையையும் மக்கள் அறிவார்களானால் அதற்காக அவர்கள் போட்டி போட்டுக் கொண்டு வருவர். யாருக்கு அந்த இடம் கொடுப்பது என்பதில் சீட்டு குலுக்கும் நிலையேற்பட்டாலும் அதற்கும் தயாராகி விடுவர்.தொழுகையை ஆரம்ப நேரத்தில் நிறைவேற்றுவதில் உள்ள நன்மையை அறிவார்களானால் அதற்காக விரைந்து செல்வார்கள். ஸுப்ஹ் தொழுகையிலும் இஷா (அதமா)த் தொழகையிலும் உள்ள நன்மையை அறிவார்களானால்

தவழ்ந்தாவது (ஜமாஅத்) தொழுகைக்கு வந்து சேர்ந்து விடுவர் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி615: அபூஹுரைரா (ரலி)

## 163. ஜமாஅத்தில் தொழும் பெண்கள் ஆண்களை முந்தலாகாது..

252- சில ஆண்கள் நபி (ஸல்) அவர்களுடன் தொழுது கொண்டிருந்தனர்;. அவர்கள் சிறுவர்களைப் போன்று தங்களுடைய (சிறிய) வேஷ்டியை. தங்களுடைய கழுத்திலிருந்தே கட்டியிருந்தனர் (இதைக் கண்ட நபி (ஸல்) அவர்கள் ஆண்களின் பின்னால் தொழுத பெண்களிடத்தில் ஆண்கள் ஸுஜூதிலிருந்து எழுந்து அமர்வதுவரை நீங்கள் உங்களுடைய தலைகளை ஸுஜூதிலிருந்து உயர்த்தவேண்டாம் என்று கூறினார்கள்.

புஹாரி362:ஸஹ்ல் பின் ஸஅது (ரலி)

## 164. பள்ளிக்கு வரும் பெண்கள்!

253- உங்கள் மனைவியர் பள்ளிவாசலுக்குச் செல்ல உங்களிடம் அனுமதி கேட்டால் அவர்களைத் தடுக்காதீர்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி 5238: இப்னு உமர் (ரலி)

254- உமர் (ரலி) உடைய மனைவியரில் ஒருவர் ஸுப்ஹ், இஷாத் தொழுகைகளைப் பள்ளியில் ஜமா அத்தாகத் தொழச் செல்வார். அவரிடம்(உங்கள் கணவர்) உமர் (ரலி) ரோஷக்காரராகவும் இதை விரும்பாதவராகவும் இருப்பதைத் தெரிந்து கொண்டே நீங்கள் ஏன் (பள்ளிக்குச்) செல்கிறீர்கள் என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர் என்னைத் தடுக்க முடியாது. ஏனெனில் பெண்கள் பள்ளிக்குச் செல்வதை நீங்கள் தடுக்காதீர்கள் என நபி (ஸல்) கூறியுள்ளனர் என்று பதிலுரைத்தார்.

புஹாரி900: இப்னு உமர் (ரலி)

255- பெண்கள் இன்று நடந்து கொள்ளும் முறையை நபி (ஸல்) அவர்கள் (இன்று) கண்டிருந்தால், பனூஇஸ்ராயீல் சமுதாயப் பெண்கள் தடுக்கப் பட்டது போல் இந்தப் பெண்களையும் (பள்ளிக்கு வருவதை விட்டும்) தடுத்திருப்பார்கள்.

புஹாரி869: ஆயிஷா (ரலி)

## 165. தொழுகையில் குரலை உயர்த்துதல் பற்றி..

256. (நபியே!) உங்கள் தொழுகையில் நீங்கள் குரலை மிகவும் உயர்த்தவும் வேண்டாம். மிகவும் தாழ்த்தவும் வேண்டாம். எனும் (17:110ஆவது) இறைவசனம் (பின்வரும் சூழ்நிலையில்) அருளப்பெற்றது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இஸ்லாத்தின் ஆரம்பக் காலத்தில் எதிரிகளின் தொல்லைகளைக் கருத்தில் கொண்டு) மக்காவில் மறைவாக(த் தொழுதுகொண்டு) இருந்தார்கள். (அவ்வாறு தோழர்களுடன் சேர்ந்து தொழும்போது) குரலை உயர்த்(திக் குர்ஆனை ஓ)துவார்கள். அதை இணைவைப்பாளர்கள் கேட்டுவிடும்போது குர்ஆனையும் அதை அருளிய(இறை)வனையும் அதை (மக்கள் முன்) கொண்டு வந்த (நபிய)வர்களையும் ஏசுவார்கள். ஆகவே உயர்ந்தோனாகிய அல்லாஹ் நீங்கள் உங்கள் தொழுகையில் இணைவைப்பாளர்களின் காதில் விழும் அளவிற்குக் குரலை உயர்த்தாதீர்கள் (அதற்காக உடன் தொழுகின்ற) உங்கள் தோழர்களுக்கே கேட்காதவாறு (ஒரேயடியாய்) குரலை தாழ்த்தியும் விடாதீர்கள். அவர்களுக்குக் கேட்டால் தான் உங்களிடமிருந்து அவர்கள் குர்ஆனைக் கற்பார்கள். ஆகவே இவ்விரண்டிற்கும் இடையே மிதமான போக்கைக் கையாளுங்கள் எனக் கட்டளையிட்டான்.

புஹாரி7490: இப்னு அப்பாஸ் (ரலி)

## 166. குர்ஆனை செவி தாழ்த்தி கேட்டல்..

257- (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் தம்மிடம் 'வஹீ'யைக் கொண்டு வரும்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தம் நாவையும், இரண்டு உதடுகளையும் (எங்கே மறந்து விடப்போகிறதோ என்ற அச்சத்தினால், மனனமிடுவதற்காக ஓதியபடி) அசைத்துக் கொண்டிருப்பார்கள். இது அவர்களுக்குச் சிரமமாக இருந்தது. அது அவர்களின் வதனத்திலேயே

காணப்படலாயிற்று. எனவே, அல்லாஹ், 'லா உக்ஸிமு பி யவ்மில் கியாமா" என்று தொடங்கும் (75 வது அத்தியாயத்திலுள்ள) 'இந்த வஹீயை (வேத அறிவிப்பை) அவசர அவசரமாக மனனம் செய்வதற்காக, உங்கள் நாவை அசைக்காதீர்கள். அதை (உங்கள் மனத்தில்) ஒன்று சேர்த்து, அதை (நீங்கள்) ஓதும்படி செய்வது எம்முடைய பொறுப்பாகும்" எனும் (திருக்குர்ஆன் 75:16,17) வசனங்களை அருளினான். அதாவது, 'உங்கள் நெஞ்சத்தில் பதியச் செய்வதும் அதை உங்கள் நாவால் ஓதும்படிச் செய்வதும் எம்முடைய பொறுப்பாகும்" என்று இறைவன் கூறினான். மேலும், 'நாம் இதனை ஓதிவிட்டோமாயின், நீங்கள் ஓதுவதைத் தொடருங்கள்" என்ற (திருக்குர்ஆன் 75:18 வது) வசனத்தையும் அருளினான். அதாவது, 'நாம் (வானவர் மூலம்) அருளும்போது, அதனைக் கவனத்துடன் கேளுங்கள்" என்று கூறினான். 'பின்னர், அதனை விளக்குவதும் எம்முடைய பொறுப்பாகும்" எனும் (திருக்குர்ஆன் 75:19 வது) வசனத்தையும் அருளினான். அதாவது, 'உங்கள் நாவினால் அதனை(ப் பிறருக்கு) விளக்கித் தரும்படி உங்களை (ஆயத்தம்) செய்வது நம்முடைய பொறுப்பாகும்' என்று கூறினான். (இந்த வசனங்கள் அருளப்பட்ட பின்னர்) தம்மிடம் ஜிப்ரீல் (அலை) அவர்கள் ('வஹீ' கொண்டு வரும்போது,) தலையைத் தாழ்த்தி (அருளப்படுவதை நபி(ஸல்) அவர்கள் மௌனத்துடன் கேட்டு)க் கொண்டிருப்பார்கள். (வசனங்களை அருளிவிட்டு) ஜிப்ரீல் (அலை) அவர்கள் சென்று விடும்போது, அல்லாஹ் வாக்களித்த பிரகாரம் நபி (ஸல்) அவர்கள் அவற்றை ஓதினார்கள்.

புஹாரி: 4929 இப்னு அப்பாஸ் (ரலி).

258. அவசரப்பட்டு நீங்கள் உங்கள் நாவை அசைக்கவேண்டாம் (75:16) என்ற திருக்குர்ஆன் வசனத்தை இப்னு அப்பாஸ் (ரலி) விளக்கும் போது நபி (ஸல்) அவர்களுக்கு இறைச் செய்தி அருளப்படும் போது மிகுந்த சிரமம் ஏற்பட்டது இது அவர்களின் உதடுகளை அவர்கள் அசைப்பதன் முலம் புலனாயிற்று. வஹீயை (மனனம் செய்ய) அவசரப்பட்டு நீங்கள் உங்கள் நாவை அசைக்க வேண்டாம். (உங்கள் நெஞ்சில்) ஒன்று சேர்ப்பதும் (உங்கள் நாவின் முலம்) ஓத வைப்பதும் நமது பொறுப்பாகும். எனவே நாம் அதனை ஓதும்போது ஓதுவதிலேயே நீர் கவனம் செலுத்துவீ ராக அதாவது மவுனமாக இருந்து அதனைச் செவி தாழ்த்திக் கேட்பீராக - பின்னர் நீர் அதனை ஓதும்படிச் செய்வதும் நமது பொறுப்பாகும்.

(75:16.19) என்ற வசனங்களை அப்போது அல்லாஹ் அருளினான் என்று கூறிவிட்டு நபி (ஸல்) அவர்கள் தமது இருஉதடுகளை அசைத்தது போன்று நான் அசைக்கின்றேன் என்று சொல்லித் தங்கள் இரு உதடுகளையும் இப்னு அப்பாஸ் (ரலி) அசைத்துக் காட்டினார்கள். இந்த ஹதீஸை இப்னு அப்பாஸ் (ரலி) இடமிருந்து அறிவிக்கும் ஸயீது பின் ஜுபைர் அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) தமது இரு உதடுகளையும் அசைத்தது போன்று நான் அசைக்கின்றேன் என்று கூறி அசைத்துக் காட்டினார்கள். மேலும் இப்னு அப்பாஸ் தொடர்ந்து, அதன் பின்னர் நபி (ஸல்) அவர்களிடம் ஜிப்ரயீல் (அலை) வரும்போது (அவர்கள் ஓதுவதை) செவிதாழ்த்திக் கேட்பதை வழக்கமாக்கிக் கொண்டார்கள். ஜிப்ரில் சென்றதும் அவர்கள் ஓதியது போன்றே நபி (ஸல்) அவர்களும் ஓதினார்கள் என்று கூறினார்கள்.

புஹாரி5: ஸயீது பின் ஜுபைர் (ரலி).

## 167. ஸுப்ஹுத் தொழுகையில் சப்தமாக ஓதுதல்..

259- நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் சிலர் உக்காழ் எனும் சந்தையை நோக்கி புறப்பட்டனர். (இந்த நேரத்தில்) ஷைத்தான்களுக்கு வானுலகச் செய்திகள் தெரிவது தடுக்கப் பட்டுவிட்டது. (ஒட்டுக் கேட்கச் சென்ற) ஷைத்தான்கள் மீது தீப்பந்தங்கள் எறியப்பட்டன. (ஒட்டுக் கேட்க சென்ற) ஷைத்தான்கள் தம் தலைவர்கள் இடம் (ஒரு செய்தியும் கிடைக்காமல்) திரும்பிய போது உங்களுக்கு என்ன நேர்ந்தது? என்று கேட்டார்கள். வானத்துச் செய்திகள் எங்களுக்கு தடுக்கப் பட்டுவிட்டன. எங்கள் மீது தீப்பந்தங்கள் எறியப்படுகின்றன என்று அந்த ஷைத்தான்கள் கூறினர். புதியதொரு நிகழ்ச்சி ஏதேனும் ஏற்பட்டிருக்கவேண்டும். அதன் காரணமாகவே தடுக்கப் பட்டிருக்க வேண்டும். எனவே நீங்கள் கீழ் திசை மேல் திசை எங்கேனும் சென்று என்னவென்று ஆராயுங்கள்! என்று தலைவர்கள் கூறினர். ஷைத்தான்கள் திஹாமா எனும் பகுதியை நோக்கி சென்றனர். உக்காழ் சந்தைக்கு செல்லும் வழியில் பேரீச்ச மரங்களுக்கு அருகில் நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களுக்கு பஜ்ருத் தொழுவித்துக் கொண்டிருந்தார்கள். அதில் ஓதப்பட்ட குர்ஆன் வசனங்களை அந்த ஷைத்தான்கள் கேட்ட போது வானத்துச் செய்திகள்

தடுக்கப்பட இந்த குர்ஆனே காரணம் என்று கூறிக்கொண்டு தம் தலைவர்களிடம் சென்று எங்கள் சமுதாயமே! நிச்சயமாக நாங்கள் ஆச்சரியமான ஒரு வேதத்தைச் செவிமடுத்தோம். அது நேர் வழியை காட்டுகின்றது. எனவே அதை நாங்கள் நம்பினோம். எங்கள் இறைவனுக்கு நாங்கள் இணைவைக்கவே மாட்டோம் என்று கூறினர். உடனே அல்லாஹ் ஜின் எனும் அத்தியாயத்தை இறக்கி அருளினான். நபி (ஸல்) அவர்கள் அந்த அத்தியாயத்தில் அறிவிக்கப்படுவது ஜின்கள் கூறியதைப் பற்றியே. (ஷைத்தான்கள் கூறியதைப் பற்றி அல்ல)

புஹாரி773: இப்னு அப்பாஸ் (ரலி)

## 168. லுஹர் அஸ்ர் தொழுகையில் சப்தமின்றி ஓதுதல்..

260- லுஹர் தொழகையின் முதல் இரண்டு ரக்அத்களில் அல்ஹம்து அத்தியாயத்தையும் வேறு இரண்டு அத்தியாயங்களையும் நபி (ஸல்) அவர்கள் ஓதுவார்கள். (அந்த இரண்டு ரக்அத்துகளில்) முதல் ரக்அத்தில் நீண்ட அத்தியாயத்தையும் இரண்டாம் ரக்அத்தில் சிறிய அத்தியாயத்தையும் ஓதுவார்கள். சில சமயங்களில் சில வசனங்களை எங்களுக்கு கேட்குமாறு ஓதுவார்கள். அஸர் தொழுகையில் (முதல் இரண்டு ரக்அத்களில்) அல்ஹம்து அத்தியாயத்தையும் வேறு இரண்டு அத்தியாயங்களையும் ஓதுவார்கள். ஸுபுஹ் தொழுகையின் முதல் ரக்அத்தில் நீண்ட நேரம் ஓதுவார்கள். இரண்டாம் ரக்அத்தில் குறைந்த நேரம் ஓதுவார்கள்.

புஹாரி759: அபூகதாதா (ரலி)

## 169. நீதவான்களை புகார் கூறுவதில் பயந்து கொள்ளுங்கள்

261- (கஃபாவில் அதிகாரியாக இருந்த) ஸஃது பின் அபீவக்காஸ் (ரலி) மீது கூஃபா வாசிகளில் சிலர் உமர் (ரலி) இடத்தில் புகார் கூறினார்கள். அவர் முறையாகத் தொழுவிப்பதில்லை என்பதும் அவர்களின் புகார்களில் ஒன்றாக இருந்தது. உடனே உமர் (ரலி) அவரை நீக்கி விட்டு அம்மார் (ரலி) அவர்களை அதிகாரியாக நியமித்தார்கள். ஸஃதை (மதீனாவுக்கு) வரவழைத்து அபூஇஸ்ஹாக்! நீங்கள் முறையாகத் தொழுவிப்பதில்லை என்று கூஃபா வாசிகளில் சிலர் கூறுகின்றனரே! என்று கேட்டார்கள். அதற்கு ஸஃது (ரலி) அல்லாஹ்வின் மீது

ஆணையாக! நபி (ஸல்) அவர்கள் தொழுது காட்டிய முறைப்படியே தொழுவித்தேன். அதில் எந்தக் குறையும் வைக்கவில்லை. இஷாவுடைய முதல் இரண்டு ரக்அத்களில் நீண்ட நேரம் ஓதியும் பின் இரண்டு ரக்அத்களில் சுருக்கமாக ஓதியும் தொழுவிக்கிறேன் என்று பதிலளித்தார்கள். உம்மைப் பற்றி நமது கருத்தும் அதுவே என்று உமர் (ரலி) கூறினார்கள். அதன் பின் ஒரு நபரைத் அல்லது சில நபர்களை ஸஃது (ரலி) உடன் கூஃபாவுக்கு அனுப்பி ஸஃதைப் பற்றி கூஃபாவாசிகளிடம் விசாரிக்கச் சொன்னார்கள். ஒரு பள்ளிவாசல் விடாமல் அவரைப் பற்றி விசாரித்தபோது அனைவரும் ஸஃதைப் பற்றி நல்ல விதமாகவே கூறினார்கள். பனூ அப்பாஸ் கூட்டத்தாரின் பள்ளிவாசலில் விசாரித்தபோது அந்த கூட்டத்தை சேர்ந்த அபூஸஃதா எனப்படும் உஸாமா பின் கதாதா என்பவர் எழுந்தார். நீங்கள் விசாரிப்பதால் தான் நான் சொல்கிறேன். ஸஃது அவர்கள் தமது படையிலுள்ளவர்களிடம் எளிமையாக நடப்பதில்லை. (பொருள்களை) சமமாக பங்கிடுவதில்லை: தீர்ப்பு வழங்குவதில் நீதியாக நடப்பதில்லை என்று புகார் கூறினார். இதைக் கேட்ட ஸஃது (ரலி) அல்லாஹ்வின் மீது ஆணையாக! மூன்று பிரார்த்தனைகளை (உமக்கெதிராக) நான் செய்யப் போகிறேன் என்று கூறிவிட்டு இறைவா! உனது இந்த அடியார் (அவரது புஹாரில்) பொய்யராகவும் புகழ் விரும்பிப் புகார் கூறுவராகவும் இருந்தால் அவரது ஆயுளை அதிகப் படுத்துவாயாக! அவரது வறுமையையும் அதிகப் படுத்துவாயாக! அவரைப் பல சோதனைகளுக்கு ஆளாக்குவாயாக! என்று பிரார்த்தனை செய்தார்கள். இதன் பிறகு அந்த மனிதரிடம் எவரேனும் நலம் விசாரித்தால் சோதனைக்காளான முதுபெரும் வயோதிகனாகி விட்டேன். ஸஃதின் பிரார்த்தனை என் விஷயத்தில் பலித்து விட்டது எனக் கூறக் கூடியவராகி விட்டார். ஜாபிர் (ரலி) வழியாக அறிவிக்கும் அப்துல் மாலிக் பின் உமைர் அதன் பிறகு நானும் அவரைப் பார்த்திருக்கிறேன். முதுமையில் அவரது புருவங்கள் அவரது கண்களை மறைத்திருந்தன. பாதைகளில் நடந்து செல்லும் பெண்கள் மீது (பார்வை பறி போனதால்) மோதிக் கொள்வார்: இந்த நிலையில் அவரை நான் பார்த்திருக்கிறேன் என்று குறிப்பிட்டார்.

புஹாரி755: ஜாபிர் பின் ஸமுரா (ரலி)

## 170. ஸுப்ஹு மஃரிப் தொழுகையில் சப்தமாக ஓதுதல்..

262- எங்களில் ஒருவர் தம் அருகிலிருப்பவரை அறிந்து கொள்ளும் (அளவில் வெளிச்சம் ஏற்படும்) சமயத்தில் நபி (ஸல்) அவர்கள் ஸுப்ஹுத் தொழுபவர்களாக இருந்தனர். அறுபது (வசனங்கள்) முதல் நூறு வரை ஸுப்ஹில் ஓதுவார்கள். சூரியன் (உச்சியிலிருந்து) சாயும் போது லுஹர் தொழுபவாகளாக இருந்தனர். அஸரையும் தொழுவார்கள். (அஸர் தொழுகையை நிறைவேற்றிய) எங்களில் ஒருவர் மதீனாவின் கடைக் கோடிக்குச் சென்று விட்டுத் திரும்பி வந்தால் சூரியன் உயிருடன் (அதாவது ஒளி குன்றாமல்) இருந்து கொண்டிருக்கும். இந்த ஹதீஸை அபூபர்ஸாவிடமிருந்து அறிவிக்கும் அபுல் மின்ஹால், மஃரிப் பற்றி அபூபர்ஸா (ரலி) கூறியதை நான் மறந்து விட்டேன். இஷாவை இரவின் மூன்றில் ஒரு பகுதி இருக்கும் வரை அல்லது இரவின் பாதிவரை தாமதப் படுத்துவது பற்றிப் பொருட்படுத்த மாட்டார்கள் என அபூபர்ஸா (ரலி) குறிப்பிட்டார்கள் என்கிறார்.

புஹாரி541: அபூபர்ஸா (ரலி)

263- நான் வல்முர்ஸலாதி உர்பன் என்ற அத்தியாயத்தை ஓதும்போது அதனை செவியுற்ற (என் தாயார்) உம்முல் ஃபழ்லு (ரலி) அருமை மகனே! அல்லாஹ்வின் மீது ஆணையாக! மஃரிப் தொழுகையில் நபி (ஸல்) அவர்கள் இந்த அத்தியாயத்தை ஓதியதுதான் நான் அவர்களிடமிருந்து கடைசியாக செவியுற்றதாகும். நீ அதை ஒதியதன் மூலம் எனக்கு நினைவு படுத்தி விட்டாய் என்று கூறினார்கள்.

புஹாரி763: இப்னு அப்பாஸ் (ரலி)

264- நபி (ஸல்) அவர்கள் மஃரிப் தொழுகையில் தூர் அத்தியாயத்தை ஓதும்போது நான் செவியுற்றுள்ளேன்.

புஹாரி765:ஜுபைர் பின் முத்இம் (ரலி)

## 171. இஷா தொழுகையில் சப்தமாக ஓதுதல்..

265- நபி (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தின் போது இஷாத் தொழுகையின் ஒரு ரக்அத்தில் வத்தீனி வஸ்ஸைத்தூனி என்ற அத்தியாயத்தை ஒதினார்கள்.

புஹாரி767: பராவு பின் ஆஸிப் (ரலி)

266- முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுடன் தொழுதுவிட்டுப் பிறகு தம் (பனூ ஸலமா) கூட்டத்தாரிடம் சென்று அவர்களுக்கு நபி (ஸல்) அவர்களுடன் தொழுத அதே தொழுகையைத் தொழுவிப்பது வழக்கம். (ஒரு முறை அவர் இஷாத் தொழுகை நடத்தும்போது) அவர்களுக்கு (நீண்ட அத்தியாயமான) அல்பகரா எனும் (2ஆவது) அத்தியாயத்தை ஒதினார். அப்போது ஒரு மனிதர் (தனியாக விலகிச் சென்று) விரைவாகத் தொழுது (விட்டுத் தமது பணியைக் கவனிக்கச் சென்று )விட்டார். இச்செய்தி முஆத் (ரலி) அவர்களுக்கு எட்டியது. அப்போது அவர்கள் அவர் ஒரு நயவஞ்சகர்( முனா∴பிக்) என்று சொன்னார்கள். அந்த மனிதருக்கு இச்செய்தி எட்டியதும் அவர் நபி (ஸல்) அவர்களிடம் சென்று அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் உழைக்கும் வர்க்கத்தினர். எங்கள் ஒட்டகங்கள் மூலம் நீர்ப் பாய்ச்சுவோம். இந்நிலையில் முஆத் அவர்கள் நேற்றிரவு எங்களுக்குத் தொழுவித்தபோது (நீண்ட அத்தியாயமான) அல்பகராவை ஒதினார்கள். ஆகவே நான் (விலகித் தனியாகச் சென்று) விரைவாகத் தொழுதேன். இதனால் அவர் என்னை நயவஞ்சகன் என்று சொன்னாராம் என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள் (முஆத் (ரலி) அவர்களிடம்) முஆதே! (நீரென்ன) குழப்பவாதியா? என்று மூன்று முறை கேட்டார்கள். மேலும் (நீர் இமாமாக நிற்கும்போது) ஸப்பிஹிஸ்ம ரப்பிக்க, வஷ்ஷம்ஸி வளுஹாஹா போன்ற (சற்று சிறிய) அத்தியாயங்களை ஒதுவீ ராக என்றும் சொன்னார்கள்.

புஹாரி6106: ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)

## 172. இமாம் சுருக்கமாகவும் முறையாகவும் தொழுவித்தல்..

267.ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து அல்லாஹ் தூதரே! அல்லாஹ்வின் மீதாணையாக இன்ன மனிதர் தொழுகையை எங்களுக்கு நீண்ட நேரம் தொழுவிப்பதால் அதிகாலை (க்கூட்டு)த் தொழுகைக்கு

வராமல் நான் தாமதித்து விடுகிறேன். என்று சொன்னார். நபி (ஸல்) அவர்கள் அன்று ஆற்றிய உரையின்போது கோபப்பட்டதை விடக் கடுமையாகக் கோபப்பட்டு நான் ஒருபோதும் கண்டதில்லை. பிறகு அவர்கள் மக்களே! (வணக்க வழிபாடுகளில்) வெறுப்பூட்டுபவர்களும் உங்களில் உள்ளனர். ஆகவே, உங்களில் யார் மக்களுக்குத் தொழுவித்தாலும் அவர் சுருக்கமாகத் தொழுவிக்கட்டும். ஏனெனில் மக்களில் முதியோரும் பலவீனரும் அலுவல் உடையோரும் உள்ளனர் என்று சொன்னார்கள்.

**புஹாரி7159: அபூமஸ்ஊத் அல் அன்சாரி (ரலி)**

268- மற்றவர்களுக்குத் தொழுகை நடத்துபவர் சுருக்கமாகவே நடத்தட்டும்! ஏனெனில் பலவீனர்கள் நோயாளிகள், முதியவர்கள் அவர்களில் உள்ளனர். தனித்துத் தொழும்போது அவர் விரும்பும் அளவுக்கு நீட்டிக் கொள்ளலாம் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி703: அபூஹுரைரா (ரலி)**

269- நபி (ஸல்) அவர்கள் தொழுகையைச் சுருக்கமாகவும் (எந்த ஒன்றும் விடுபடாமல்) பூரணமாகவும் தொழுபவர்களாக இருந்தனர்.

**புஹாரி706: அனஸ் (ரலி)**

270- நபி (ஸல்) அவர்களை விடத் தொழுகையைச் சுருக்கமாகவும் (அதேசமயம்) பூரணமாகவும் தொழுவிக்கக் கூடிய வேறு எந்த இமாமின் பின்னாலும் நான் தொழுதது கிடையாது. ஓரு குழந்தையின் அழுகுரலை அவர்கள் கேட்க நேர்ந்தால், அக்குழந்தையின் தாயாருக்குச் சஞ்சலம் ஏற்பட்டு விடுமோ என்ற அச்சத்தில் தொழுகையைச் சுருக்கமாகவே முடித்துக் கொள்வார்கள்.

**புஹாரி708: அனஸ் பின் மாலிக் (ரலி)**

271- நீண்ட நேரம் தொழுவிக்கும் எண்ணத்துடன் நான் தொழுகையைத் துவக்குகின்றேன். அப்போது குழந்தையின் அழுகுரலை நான் கேட்கிறேன். (எனக்குப் பின்னால் தொழுது கொண்டிருக்கும்) அந்தக் குழந்தையின்

தாயாருக்குச் சிரமமளிக்கக் கூடாது என்பதனால் தொழுகையைச் சுருக்கமாக முடித்து விடுகிறேன் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி709: அனஸ் (ரலி)

## 173.தொழுகையை சுருக்கமாக தொழுதாலும் பரிபூரணமாக தொழுதல்..

272- நபி (ஸல்) அவர்கள் ருகூவும் அவர்களது ஸஜ்தாவும் இரு ஸஜ்தாக்களுக்கிடையிலான இடைவெளியும் ருகூவிலிருந்து எழுந்து நிமிர்தலும் நிற்றல், உட்கார்தல் நீங்கலாக அனைத்தும் ஏறத்தாழ சம அளவில் அமைந்திருந்தன.

புஹாரி792: பராஉ (ரலி)

273- அனஸ் (ரலி) எங்களுக்கு நபி (ஸல்) அவர்கள் தொழுதது போல் தொழுது காட்டினார்கள். அத்தொழுகையில் ருகூவிலிருந்து தம் தலையை உயர்த்தியதும் மறந்து விட்டார்களோ என்று நாங்கள் பேசிக் கொள்ளும் அளவுக்கு நிற்பார்கள்.

புஹாரி800: ஸாபித் (ரலி)

## 174.இமாமைப் பின்பற்றுதல்..

274- நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் நாங்கள் தொழுது கொண்டிருந்தோம். அவர்கள் ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்று சொல்லி முடித்து (ஸுஜூதுக்குச் சென்று) நெற்றியைப் பூமியில் வைப்பது வரை எங்களில் யாரும் (ஸுஜூதுக்காகத்) தமது முதுகை வளைக்க மாட்டார்கள்.

புஹாரி811: பராவு (ரலி)

## 175.ருக்உ ஸுஜூதில் என்ன கூறுவது?..

275- நபி (ஸல்) அவர்கள் தமது ருகூவிலும் ஸஜ்தாவிலும் ஸுப்ஹான கல்லாஹும்ம ரப்பனா வபிஹம்திக அல்லாஹும்மஃபிர்லி (இறைவா! நீ தூயவன்: எங்கள் இறைவா! உன்னைப் போற்றுகிறோம்: இறைவா! என்னை மன்னித்துவிடு) என்று அதிகமதிகம் கூறுவார்கள். (இதாஜாஅ... என்ற

அத்தியாயத்தில் கூறப்படும்) குர்ஆனின் கட்டளையை இதன் மூலம் செயல் படுத்துவார்கள்.

புஹாரி817: ஆயிஷா (ரலி)

## 176.ஸுஜூதில் நிலத்தில் படும் உடல் உறுப்புகள்..

276- நெற்றி, இரு கைகள், இரண்டு மூட்டுக் கால்கள், இரண்டு கால்கள் ஆகிய ஏழு உறுப்புக்கள் படுமாறு ஸஜ்தாச் செய்யும்படி நபி (ஸல்) அவர்கள் கட்டளையிடப் பட்டார்கள். ஆடையோ முடியோ (தரையில் படாதவாறு) தடுக்கக் கூடாது எனவும் கட்டளையிடப் பட்டார்கள்.

புஹாரி809: இப்னு அப்பாஸ் (ரலி)

## 177. ஸுஜூதின் போது....

277- நபி (ஸல்) அவர்கள் தொழுகையில் (ஸுஜுது செய்யும் போது) தமது இரு அக்குளின் வெண்மை தெரியும் அளவுக்குத் தமது இரு கைகயையும் விரித்து வைப்பார்கள்.

புஹாரி390: மாலிக் பின் புஹைனா (ரலி)

## 178.தொழுகையின் போது சுத்ரா எனும் தடுப்பு....

278- நபி (ஸல்) அவர்கள் பெருநாள் அன்று (தொழுவிப்பதற்காகத் திடல் நோக்கிச்) செல்லும் போது ஈட்டியை எடுத்து வருமாறு கூறுவார்கள். அவர்களுக்கு முன்னால் அது நாட்டப் பட்டதும் அதை நோக்கித் தொழுவார்கள். மக்கள் அவர்களுக்குப் பின்னே இருப்பார்கள். பயணத்தின் போதும் இவ்வாறு செய்பவர்களாக இருந்தனர். இதனால் தான் (நமது) தலைவர்களும் அவ்வாறு செய்கின்றனர்.புஹாரி494: இப்னு உமர் (ரலி)

279- நபி (ஸல்) அவர்கள் தமது ஒட்டகத்தைக் குறுக்கே நிறுத்தி அதை நோக்கித் தொழுவார்கள் என்று இப்னு உமர் (ரலி) கூறினார்கள்.

புஹாரி507: நாஃபிவு

280- பிலால் (ரலி) பாங்கு சொல்லும் போது (பாங்கை நீட்டிச் சொல்வதற்காக) தமது வாயை அங்கும் இங்குமாக அசைப்பதைப் பார்த்தேன்.

புஹாரி634: அபூஜுஹைஃபா (ரலி)

281- தோலினால் செய்யப் பட்ட சிவப்பு நிற மேலங்கியை நபி (ஸல்) அவர்கள் அணிந்திருக்க நான் பார்த்தேன். மேலும் நபி (ஸல்) அவர்கள் உளூ செய்த தண்ணீரை பிலால் (ரலி) எடுத்துச் செல்வதையும் அந்த தண்ணீரை எடுப்பதில் மனிதர்கள் போட்டி போட்டுக் கொள்வதையும் நான் கண்டேன். யாருக்குத் தண்ணீர் கிடைத்ததோ அவர் அதை தமது உடம்பில் தடவிக் கொண்டார் யாருக்கு தண்ணீர் கிடைக்கவில்லையோ அவர் தண்ணீர் கிைக்கப் பெற்ற தமது நண்பனின் கையில் உள்ள ஈரத்தைத் தொட்டு(த் தடவி)க் கொண்டார். பிலால் (ரலி) ஒரு கைத்தடியை எடுத்து நாட்டினார்கள். நபி (ஸல்) அவர்கள் ஒரு சிவப்பு நிற மேல் அங்கியை அணிந்து ஆயத்தமாகி அந்தத் தடியை(த் தடுப்பாக) வைத்து இரண்டு ரக்அத் ஜமாஅத்தாகத் தொழுதார்கள். அந்தக் கம்பிற்கு அப்பால் மனிதர்களும் ஆடு மாடுகளும் குறுக்கே செல்வதை நான் பார்த்தேன்.

புஹாரி376:அபூ ஜுஹைஃபா (ரலி)

282- நான் பெண் கழுதை ஒன்றின் மீது சென்று கொண்டிருந்தேன். அந்நாளில் நான் பருவ வயதை நெருங்கிக் கொண்டிருந்தேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மினாவில் தடுப்பு எதையும் முன்னோக்காதவர்களாகத் (திறந்த வெளியில்) தொழுது கொண்டிருந்தார்கள். கழுதையை மேய விட்டு விட்டு (தொழுவோரின்) வரிசையினூடே கடந்து சென்று ஒரு வரிசையில் நானும் புகுந்து கொண்டேன். எனது அந்தச் செயலை யாரும் ஆட்சேபிக்கவில்லை.

புஹாரி76: இப்னு அப்பாஸ் (ரலி)

## 179.தொழுகையின் போது குறுக்கே செல்பவர் பற்றி..

283- எவரும் குறுக்கே செல்லாமலிருக்கத் தடுப்பு வைத்துக் கொண்டு அபூஸயீத் அல் குத்ரீ (ரலி) ஒரு வெள்ளிக்கிழமையன்று தொழுது கொண்டிருந்தார்கள். பனூ அபூ முயித் என்ற கூட்டத்தைச் சேர்ந்த இளைஞரொருவர் குறுக்கே செல்ல முயன்றார். உடனே அபூஸயீத் (ரலி) அவரது நெஞ்சில் கையால் தள்ளினார்கள்.

வேறு வழியேதும் உள்ளதா என்று அந்த இளைஞர் கவனித்த போது, அபூஸயீத் (ரலி)யின் குறுக்கே செல்வதைத் தவிர அவருக்கு வேறு வழி தென்படவில்லை. எனவே மீண்டும் அவர்களுக்குக் குறுக்கே செல்ல முயன்றார். முன்பை விடக் கடுமையாக அபூஸயீத் (ரலி) அவரைத் தள்ளினார்கள். அதனால் அவருக்குப் பாதிப்பு ஏற்பட்டது. உடனே அவர் (ஆட்சித் தலைவராக இருந்த) மர்வானிடம் சென்று இது பற்றி முறையிட்டார். அவரைத் தொடர்ந்து அபூஸயீத் (ரலி) மர்வானிடம் சென்றார்கள். உமக்கும் உம் சகோதரர் மகனுக்குமிடையே என்ன பிரச்சனை? என்று மர்வான் கேட்டார். உங்களில் எவரேனும் தமக்கு முன்னால் தடுப்பு வைத்துக் கொண்டு தொழும் போது, யாராவது குறுக்கே செல்ல முயன்றால் அவரைத் தடுக்க வேண்டும். அதை அவர் எதிர்த்தால் அவருடன் சண்டையிட வேண்டும். ஏனெனில் அவர் நிச்சயம் ஷைத்தானாவார் என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் செவியுற்றுள்ளேன் என அபூஸயீத் (ரலி) கூறினார்கள்.

புஹாரி509: அபூஸாலிஹ் (ரலி)

284- தொழுபவரின் குறுக்கே செல்பவர் பற்றி நபி(ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றதை அறிந்து வருமாறு என்னை அபூஜுஹைம் (ரலி) அனுப்பி வைத்தார். தொழுபவருக்குக் குறுக்கே செல்பவர், அதனால் தமக்கு ஏற்படும் பாவத்தைப் பற்றி அறிந்திருந்தால் அவருக்குக் குறுக்கே செல்வதற்குப் பதில் நாற்பது நாட்கள் நின்று கொண்டிருப்பது அவருக்கு நல்லதாகத் தோன்றும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஜுஹைம் (ரலி) விடையளித்தார்கள். இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபுன்னழ்ரு என்பவர் நாற்பது வருடங்கள் என்று கூறினார்களா? அல்லது நாற்பது மாதங்கள் அல்லது நாற்பது நாட்கள் என்று கூறினார்களா? என்பது சரியாக தமக்கு நினைவில்லை என்கிறார்.

புஹாரி510: புஸ்ரு பின் ஸயீத் (ரலி)

## 180. தடுப்புக்கும் தொழுபவருக்கும் இடைவெளி..

285- நபி (ஸல்) அவர்கள் தொழுமிடத்துக்கும் சுவற்றுக்குமிடையே ஒரு ஆடு நடக்குமளவுக்கு இடைவெளி இருக்கும்.

புஹாரி496: ஸஹ்ல் பின் ஸஃது (ரலி)

286- மேடைப் பகுதியில் உள்ள சுவர் பக்கம் (நபி (ஸல்) தொழும் போது) ஒரு ஆடு கடந்து செல்ல முடியாத அளவு இடைவெளியே இருந்தது.

புஹாரி497: ஸலமா பின் அல் அக்வஃ (ரலி)

287- நான் ஸலமா பின் அக்வஃ (ரலி) உடன் (பள்ளிக்கு) செல்பவனாக இருந்தேன். ஸலமா (ரலி) குர்ஆன் வைக்கப்படும் இடத்தில் அமைந்த தூணருகே தொழுவார்கள். அபூ முஸ்லீம் அவர்களே! இந்தத் தூணைத் தேர்ந்தெடுத்துத் தொழுகிறீர்களே? என்று நான் கேட்டேன். அதற்கு, நபி (ஸல்) அவர்கள் இந்த இடத்தில் தொழுவதற்குச் சிரத்தை எடுப்பவர்களாக இருந்ததை நான் பார்த்திருக்கிறேன் என்று பதிலளித்தார்கள்.

புஹாரி502: யஸீத் பின் அபி உபைத்

## 181. தொழுபவரின் முன்பாக படுத்தல்..

288- நபி (ஸல்) அவர்கள் எனது படுக்கை விரிப்பில் தொழும் போது அவர்களுக்கும் கிப்லாவுக்குமிடையில் குறுக்கே ஜனாஸா கிடப்பது போல் நான் கிடப்பேன்.

புஹாரி383:ஆயிஷா (ரலி)

289- நபி (ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருக்கும் போது நான் அவர்களின் விரிப்பில் அவர்களுக்குக் குறுக்கே உறங்கிக் கொண்டிருப்பேன்.அவர்கள் வித்ருத் தொழ எண்ணும் போது என்னை எழச் செய்வார்கள். அதன் பின் நான் வித்ருத் தொழுவேன்.

புஹாரி512:ஆயிஷா (ரலி)

290- ஆயிஷா (ரலி)யிடம் தொழுகையை முறிக்கும் காரியங்கள் பற்றிப் பேசப்பட்டது. சிலர் நாயும் கழுதையும் பெண்ணும் (தொழுபவர்களுக்குக் குறுக்கே சென்றால்) தொழுகையை முறிப்பர் என்று கூறினர். அதை கேட்ட ஆயிஷா (ரலி) எங்களை கழுதைகளுடனும் நாய்களுடனும் ஒப்பிட்டு விட்டீர்களே! நிச்சயமாக கிப்லாவுக்கும் நபி (ஸல்) அவர்களுக்கும் இடையே கட்டிலில் நான் படுத்திருக்கும் போது நபி (ஸல்) அவர்கள் தொழுவார்கள். அப்போது எனக்கு ஏதேனும் தேவை ஏற்ப்பட்டால் எழுந்து அமர்ந்து நபி (ஸல்) அவர்களுக்குத்

தொல்லை தராமல் அவர்களின் கால் வழியாக நழுவி விடுவேன் என்று கூறினார்கள்.

புஹாரி514: மஸ்ரூக் (ரலி)

291- ஆயிஷா (ரலி)யிடம் தொழுகையை முறிக்கும் காரியங்கள் பற்றி பேசப்பட்டது. சிலர் நாயும் கழுதையும் பெண்ணும் (தொழுபவருக்குக் குறுக்கே சென்றால்) தொழுகையை முறிப்பர் என்று கூறினர். அதைக் கேட்ட ஆயிஷா (ரலி) எங்களை நாய்களோடு ஒப்பிட்டு விட்டீர்களே! நிச்சயமாக கிப்லாவுக்கும் நபி (ஸல்) அவர்களுக்குமிடையே கட்டிலில் நான் படுத்திருக்கும் போது நபி (ஸல்) அவர்கள் தொழுவார்கள். அப்போது எனக்கு ஏதேனும் தேவை ஏற்பட்டால் நபி (ஸல்) அவர்களை (நேருக்கு நேர்) எதிர் கொள்வதை விரும்பாமல் நழுவி விடுவேன் என்றார்கள்.

புஹாரி511: மஸ்ரூக் (ரலி)

292- நான் நபி (ஸல்) அவர்களுக்கு முன்னே உறங்கிக் கொண்டிருப்பேன். என் கால்களிரண்டும் அவர்களின் முகத்துக்கு நேராக இருக்கும். அவர்கள் ஸஜ்தா செய்யும்போது (விரலால் என் காலில்) குத்துவார்கள். நான் கால்களை மடக்கிக் கொள்வேன். அவர்கள் எழுந்ததும் கால்களை நீட்டிக் கொள்வேன். அன்றைய காலத்தில் (எங்கள்) வீ டுகளில் விளக்குகள் கிடையாது

புஹாரி513:ஆயிஷா (ரலி)

293- நபி (ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருக்கும் போது நான் அவர்களுக்கு எதிரில் படுத்திருந்தேன். அப்போது நான் மாதவிடாயுடன் இருந்தேன். நபி (ஸல்) அவர்கள் ஸுஜுது செய்யும் போது, சில வேளை அவர்களுடைய ஆடை என் மீதுபடும். அவர்கள் ஒரு விரிப்பின் மீது தொழுதார்கள்.

புஹாரி379: மைமூனா (ரலி)

## 182. ஒரே ஆடையுடன் தொழுதல்....

294- ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடத்தில் ஒரே ஆடை அணிந்து கொண்டு தொழுவதைப் பற்றிக் கேட்டார். நபி (ஸல்) அவர்கள் உங்களில் ஒவ்வொருவருக்கும் இரண்டு ஆடைகள் இருக்கின்றனவா? என்று கேட்டார்கள்.

புஹாரி358: அபூஹுரைரா (ரலி)

295- உங்களில் யாரும் தமது தோள் மீது எதுவும் இல்லாதிருக்க ஒரே ஆடையை அணிந்து கொண்டு தொழ வேண்டாம் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி359: அபூஹுரைரா (ரலி)

296- உம்மு ஸலமா (ரலி)வின் வீ ட்டில் நபி(ஸல்) அவர்கள் ஒரே ஆடையை அணிந்து கொண்டு அதன் இரு ஓரத்தையும் இரு தோள்களின் மீது மாற்றிப் போட்டுக்கொண்டு தொழுவதை நான் பார்த்தேன்.

புஹாரி355: உமர் பின் அபீஸலமா (ரலி)

297- ஜாபிர் (ரலி) ஒரே வேட்டியை அணிந்து கொண்டு அதைத் தமது பிடரியில் முடிச்சுப் போட்டுக் கொண்டவர்களாகத் தொழுதார்கள். அவர்களது இதர ஆடைகளோ துணி தொங்க விடப்படும் கம்பில் தொங்கிக் கொண்டிருந்தன. இவர்களிடத்தில் ஒருவர், ஒரே வேஸ்டியிலா தொழுகிறீர்கள்? என்று கேட்டார். அதற்கு உன்னைப் போன்ற மடையர்கள் என்னைப் பார்க்க வேண்டுமென்பதற்காகவே இவ்வாறு நான் செய்தேன். நபி (ஸல்) அவர்களுடைய காலத்தில் எங்களில் யாருக்குத்தான் இரு ஆடைகள் இருந்தன? என்று கேட்டார்கள்.

புஹாரி352: முஹம்மது பின் அல் முன்கதிர் (ரலி)

## 183. பள்ளிவாசல்களும் தொழுமிடங்களும்

298-அபூதர் (ரலி) அறிவித்தார்: நான் (நபி (ஸல்) அவர்களிடம்), 'இறைத்தூதர் அவர்களே! பூமியில் முதன் முதலாக அமைக்கப்பட்ட பள்ளிவாசல் எது?' என்று கேட்டேன். அவர்கள், 'அல் மஸ்ஜிதுல் ஹராம் - மக்கா நகரிலுள்ள புனித (கஅபா அமைந்திருக்கும்) இறையில்லம்" என்று பதிலளித்தார்கள். நான், 'பிறகு எது?' என்று கேட்டேன். அவர்கள், 'ஜெரூஸத்தில் உள்ள) அல் மஸ்ஜிதுல் அக்ஸா" என்று பதிலளித்தார்கள். நான், 'அவ்விரண்டுக்குமிடையே எத்தனை ஆண்டுக் காலம் (இடைவெளி) இருந்தது" என்று கேட்டேன். அவர்கள், 'நாற்பதாண்டுகள்" (மஸ்ஜிதுல் ஹராம் அமைக்கப்பட்டு நாற்பதாண்டுகள் கழித்து மஸ்ஜிதுல்

அக்ஸா அமைக்கப்பட்டது) பிறகு, 'நீ தொழுகை நேரத்தை எங்கு அடைந்தாலும் உடனே அதைத் தொழுதுவிடு. ஏனெனில், நேரப்படி தொழுகையை நிறைவேற்றுவதில் தான் சிறப்பு உள்ளது" என்று கூறினார்கள்.

**புஹாரி: 3366 அபூதர் (ரலி)**

299- எனக்கு முன்னர் (நபிமார்கள்) யாருக்கும் கொடுக்கப்படாத ஐந்து விஷயங்கள் எனக்குக் கொடுக்கப்பட்டுள்ளன. எதிரிகளுக்கும் எனக்குமிடையில் ஒரு மாத காலம் பயணம் செய்யும் இடைவெளியிருந்தாலும் அவர்களுடைய உள்ளத்தில் பயம் ஏற்படுத்தப்படுவதன் மூலம் நான் உதவி செய்யப் பட்டுள்ளேன். பூமி முழுவதும் சுத்தம் செய்யத்தக்கதாகவும் தொழுமிடமாகவும் எனக்கு ஆக்கப்பட்டுள்ளது. என்னுடைய உம்மத்தில் யாருக்காவது தொழுகையின் நேரம் வந்து விட்டால் அவர் (எந்த இடத்திலிருக்கிறாரோ அந்த இடத்தில்) தொழுது கொள்ளட்டும்! போரில் கிடைக்கின்ற பொருள்கள் எனக்கு ஹலாலாக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு நபியும் தமது சமூகத்திற்க்கு மட்டுமே நபியாக அனுப்பப்பட்டார்கள். ஆனால் நான் மனித இனம் முழுமைக்கும் நபியாக அனுப்பபட்டுள்ளேன். (மறுமையில் எனது உம்மத்துக்காக) சிபாரிசு செய்யும் வாய்ப்பு கொடுக்கப் பட்டுள்ளேன் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி438: ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)**

## 184.பூமியின் கருவூலங்களுடைய சாவிகள்

300- நான் ஒருங்கிணைந்த (பொருள்களைத் தரும்) சொற்களுடன் அனுப்பப்பட்டுள்ளேன். (எதிரிகளின் உள்ளத்தில் என்னைப் பற்றிய மதிப்பு கலந்த) அச்சம் விதைக்கப்பட்டு எனக்கு உதவப்பட்டுள்ளது. (ஒருமுறை) நான் உறங்கிக் கொண்டிருக்கையில் பூமியின் கருவூலங்களுடைய சாவிகள் கொண்டு வரப்பட்டு என் கையில் வைக்கப்பட்டன என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். இதை அபூ ஹுரைரா (ரலி) அறிவித்துவிட்டு, 'நபி (ஸல்) அவர்கள் சென்றார்கள். நீங்கள் அந்தக் கருவூலங்களை (தோண்டி) வெளியே எடுத்து (அனுபவித்துக்) கொண்டிருக்கிறீர்கள்" என்றார்கள்.

**புஹாரி: 2977: அபுஹுரைரா (ரலி)**

## 185.மஸ்ஜிதுன் நபவி நிர்மாணம்!

301- நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்த போது மதீனாவின் மேற்புறத்தில் வசித்த வந்த பனூ அம்ரு பின் அவ்ஃபு எனும் கோத்திரத்தினருடன் பதினான்கு நாட்கள் தங்கினார்கள். பின்னர் பனூநஜ்ஜார் கூட்டத்தினரை அழைத்து வருமாறு கூறினார்கள். (தங்கள்) வாள்களைத் தொங்க விட்டவர்களாக அவர்கள் வந்தனர். நபி (ஸல்) அவர்கள் தம் வாகனத்தின் மீது அமர்ந்திருந்ததும் வாகனத்தில் அவர்களுக்குப் பின்னால் அபூபக்ர் (ரலி) அமர்ந்திருந்ததும் அவர்களைச் சுற்றி பனூநஜ்ஜார் கூட்டத்தினர் நின்றதும் இன்றும் என் கண் முன்னே நிழலாடுகிறது. நபி (ஸல்) அவர்களின் ஒட்டகம் அபூ அய்யூப் (ரலி) வீட்டுக்கு முன்னால் உள்ள பகுதியில் அவர்களை இறக்கியது. தொழுகையின் நேரத்தை (எப்பொழுது) எங்கே அடைகிறார்களோ, அங்கே தொழுவது நபி (ஸல்) அவர்களின் வழக்கமாக இருந்தது. ஆடுகள் கட்டும் இடங்களில் கூடத் தொழக் கூடியவர்களாக நபி (ஸல்) அவர்கள் இருந்தனர். அவர்கள் பள்ளிவாசல் கட்டும் படி ஏவினார்கள்.

பனூநஜ்ஜார் கூட்டத்தினரை அழைத்து வரச்சொல்லி அவர்களிடம் உங்களின் இந்தத் தோட்டத்தை எனக்கு விலைக்குத் தாருங்கள்! என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டனர். அதற்கு அவர்கள் இதற்கான விலையை அல்லாஹ்விடம் தான் நாங்கள் எதிர்பார்க்கிறோம் என்றனர். (அவ்விடத்தில்) பள்ளிவாசல் கட்டுமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். அவ்விடத்தில் இணைவைப்பவர்களின் சமாதிகள் இருந்தன. அங்கு சில உபயோகமற்றப் பொருட்களும் சில பேரீச்ச மரங்களும் இருந்தன. அங்குள்ள கப்ருகளைத் தோண்டி அப்புறப்படுத்துமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டனர். அவ்வாறே அவை தோண்டப்பட்டன. அப்பூமியைச் சமப்படுத்துமாறு கட்டளையிட அதுவும் சமப்படுத்தப்பட்டது. பேரீச்சமரங்களை வெட்டுமாறு கட்டளையிட அவையும் வெட்டப்பட்டன. பள்ளிவாசலின் கிப்லாத் திசையில் பேரீச்ச மரங்களை வரிசையாக நட்டனர். அதன் இரண்டு ஓரங்களிலும் கற்களை வைத்தனர். பாடிக்கொண்டே(அங்கிருந்த)பாறைகளை அப்புறப்படுத்தினர். இறைவா! மறுமையின் நன்மையைத் தவிர வேறு நன்மையில்லை! அன்ஸார்களுக்கு, முஹாஜிர்களுக்கும் நீ மன்னிப்பளிப்பாயாக! என்று கூறியவர்களாக நபி (ஸல்)

அவர்களும் (சேர்ந்து பாறைகளை அப்புறப்படுத்துபவர்களாக) அவர்களுடன் இருந்தனர்.

புஹாரி428: அனஸ் (ரலி)

## 186.கிப்லா மாற்றம் பற்றி....

302- நபி (ஸல்) அவர்கள் பதினாறு அல்லது பதினேழு மாதங்கள் பைத்துல் முகத்தஸை நோக்கித் தொழுதார்கள். நபி (ஸல்) அவர்கள் கஃபாவை நோக்கித் தொழ வேண்டுமென ஆசைப்பட்டார்கள். அப்போது நீர் வானத்தை நோக்கி உமது முகத்தைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டிருப்பதை நாம் அறிவோம் (2:144) என்ற வசனத்தை அல்லாஹ் இறக்கினான். உடனே கஃபாவை முன்னோக்கி தொழலானார்கள். (யஹுதிகளிலுள்ள சில அறிவீனர்கள் அவர்கள் முன்னர் நோக்கியிருந்த கிப்லாவை விட்டுத் திருப்பி விட்டது எது? என்று கேட்கின்றனர். (நபியே!) நீர் கூறும்: கிழக்கும் மேற்கும் அல்லாஹ்வுக்கே உரியன. தான் நாடியோரை அவன் நேர்வழியில் நடத்திச் செல்வான் என்று (2:142) இந்த வசனம் இறங்கியதும் ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களுடன் தொழுது விட்டு வெளியே வந்து அன்ஸாரிக் கூட்டத்தாரிடம் சென்றார். அவர்கள் பைத்துல் முகத்தஸை நோக்கி அஸர் தொழுது கொண்டிருந்தனர். அவர்களிடம் நான் நபி (ஸல்) அவர்களுடன் தொழுதேன்: அவர்கள் கஃபாவை முன்னோக்கித் தொழுதார்கள் என்று நான் சாட்சி சொல்கிறேன், என்று கூறினார். உடனே தொழுதுக் கொண்டிருந்தவர்கள் கஃபாவை முன்னோக்கித் திரும்பினார்கள்.

புஹாரி399: பராஉ பின் ஆஸிப் (ரலி)

303- நபி (ஸல்) அவர்களுடன் நாங்கள் பைத்துல் மக்திஸை நோக்கி 'பதினாறு' அல்லது 'பதினேழு' மாதங்கள் தொழுதோம். பிறகு அல்லாஹ் நபி (ஸல்) அவர்களை (தற்போதைய கஅபா எனும்) இந்தக் கிப்லாவை நோக்கித் திருப்பிவிட்டான்.

புஹாரி 4492. பராஉ (ரலி)

304- கூபா பள்ளிவாசலில் மக்கள் ஸுபுஹ் தொழுது கொண்டிருந்த போது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, சென்ற இரவில் கஃபாவை முன்னோக்கித் தொழுமாறு நபி (ஸல்) அவர்களுக்கு இறை வசனம் அருளப்பட்டது, என்று

கூறினார். (பைத்துல் முகத்தஸ் இருக்கும் திசையான) ஷாம் நாட்டை நோக்கித் தொழுதுக் கொண்டிருந்த அவர்கள் அப்படியே கஃபாவை நோக்கித் திரும்பிக் கொண்டார்கள்.

புஹாரி403:இப்னு உமர் (ரலி)

## 187.கல்லறை மீது பள்ளி கட்டக்கூடாது.

305- உம்மு ஹபீபா (ரலி)வும் உம்மு ஸலமா (ரலி)வும் தாங்கள் அபீஸீனியாவில் கண்ட உருவங்கள் இடம் பெற்ற கோவிலைப் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தனர். அப்போது நபி (ஸல்) அவர்களில் நல்ல மனிதர் ஒருவர் வாழ்ந்து மரணித்து விட்டால் அவரது அடக்கத் தலத்தின் மேல் வணக்க தலத்தை அவர்கள் எழுப்பி விடுவார்கள். அந்த நல்லவர்களின் உருவங்களையும் அதில் பதித்து விடுவார்கள். மறுமை நாளில் அல்லாஹ்வின் சன்னிதியில் அவர்கள் மிகவும் கெட்டவர்களாவர் என்று கூறினார்கள்.

புஹாரி427: ஆயிஷா (ரலி)

306- நபி (ஸல்) அவர்கள் தாம் மரணிப்பதற்கு முன்னால் நோயுற்றிருந்தபோது, 'யூதர்களையும் கிறித்தவர்களையும் அல்லாஹ் சபிப்பானாக! அவர்கள் தங்களின் நபிமார்களின் மண்ணறைகளை வணக்கஸ்தலங்களாக ஆக்கிவிட்டனர்" என்று கூறினார்கள். இந்தப் பயம் மட்டும் இல்லையாயின் நபி (ஸல்) அவர்களின் கப்ரைத் திறந்த வெளியில் நபித் தோழர்கள் வைத்திருப்பார்கள். எனினும் அதுவும் வணக்கஸ்தலமாக ஆக்கப்பட்டுவிடுமோ என நான் அஞ்சுகிறேன்.

புஹாரி 1330. ஆயிஷா (ரலி)

307- "தங்கள் நபிமார்களின் அடக்கஸ்தலங்களை வணக்கஸ்தலங்களாக ஆக்கிய யூதர்களை அல்லாஹ் நாசமாக்குவானாக!" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி:437 அபுஹுரைரா (ரலி)

308- நபி (ஸல்) அவர்கள் மரணவேளை நெருங்கிய போது தமது போர்வையைத் தமது முகத்தின் மீது போடுபவர்களாகவும் மூச்சுத் திணறும் போது அதைத் தம்

முகத்தை விட்டு அகற்றுபவர்களாகவும் இருந்தனர். இந்த நிலையில் அவர்கள் இருக்கும் போது தங்கள் நபிமார்களின் அடக்கஸ்தலங்களை வணக்கஸ்தலங்களாக ஆக்கிய யூத கிறிஸ்தவர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் ஏற்படட்டும் எனக் கூறி அவர்களின் செய்கை பற்றி எச்சரித்தார்கள்.

புஹாரி435: ஆயிஷா (ரலி)

## 188.அல்லாஹ்வுக்காக ஒரு பள்ளியை நிர்மாணிப்பவருக்கு..

309- உஸ்மான் (ரலி) பள்ளியை விரிவு படுத்தியபோது நீங்கள் மிகவும் விரிவு படுத்தி விட்டீர்கள் என்று மக்கள் அவர்களிடம் ஆட்சேபணை செய்தார்கள். அதற்கு அல்லாஹ்வின் திருமுகத்தை நாடி யார் பள்ளிவாசல் ஒன்றைக் கட்டுகிறாரோ அது போன்ற ஒன்றைச் சுவர்க்கத்தில் அவருக்காக அல்லாஹ் கட்டுகிறான் என்று நபி (ஸல்) கூற நான் செவியுற்றுள்ளேன் என உஸ்மான் (ரலி) கூறினார்கள்.

புஹாரி450: உபைதுல்லாஹ் அல் கவ்லானி (ரலி)

## 189.ருகூவின் நிலையில்....

310- நான் எனது தந்தையின் விலாப் பக்கமாக நின்று தொழுதேன். அப்போது ருகூவின் போது எனது இரு கைகளையும் இரு தொடைகளின் இடுக்கில் வைத்துக் கொண்டேன். இதை என் தந்தை தடுத்து நாங்கள் இவ்வாறு செய்து கொண்டிருந்தோம். அதை விட்டும் நாங்கள் தடுக்கப்பட்டு எங்கள் கைகளை மூட்டுக் கால்கள் மீது வைக்குமாறு உத்தரவிடப் பட்டோம் என்றார்.

புஹாரி790: முஸ்அப் இப்னு ஸஃது (ரலி)

## 190.தொழுகையின் போது பேசக்கூடாது

311- (ஆரம்ப காலத்தில்) நபி (ஸல்) அவர்கள் தொழும்போது அவர்களுக்கு நாங்கள் ஸலாம் கூறுவோம். அவர்கள் எங்களுக்கு பதில் ஸலாம் கூறுவார்கள். நாங்கள் (அபீசீனியாவின் மன்னர்) நஜ்ஜாஸியிடமிருந்து திரும்பியபோது அவர்களுக்கு ஸலாம் கூறினோம். எங்களுக்கு ஸலாம் கூறவில்லை. (தொழுது

முடித்ததும்) 'நிச்சயமாக தொழுகைக்கு என்று சில அலுவல்கள் உள்ளன" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி 1199. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி)

312- (ஆரம்பக் காலத்தில்) நாங்கள் தொழுகையில் பேசிக்கொண்டிருந்தோம். எங்களில் ஒருவர் தம் தோழரிடம் (சொந்தத்) தேவை குறித்துப் பேசுவார். 'அனைத்துத் தொழுகைகளையும் (குறிப்பாக) நடுத் தொழுகைகயையும் பேணி(த் தொழுது) வாருங்கள். மேலும், நீங்கள் உள்ளச்சம் உடையவர்களாக நின்று அல்லாஹ்வை வணங்குங்கள்' எனும் (திருக்குர்ஆன் 02:238 வது) வசனம் அருளப்படும் வரை (நாங்கள் இவ்வாறே தொழுகையில் பேசிவந்தோம்). இந்த வசனம் அருளப்பட்டவுடன் பேசாமலிருக்கும்படி எங்களுக்குக் கட்டளையிடப்பட்டது.

புஹாரி 4534. ஸைத் இப்னு அர்கம் (ரலி)

313- நபி (ஸல்) அவர்கள் என்னை தம் அலுவல் விஷயமாக (வெளியூர்) அனுப்பினார்கள். நான் அந்த வேலையை முடித்துத் திரும்பி வந்து நபி (ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறினேன். அவர்கள் எனக்கு மறுமொழி கூறவில்லை. என் மனதில் அல்லாஹ்வுக்கு மட்டுமே தெரிந்த சில எண்ணங்கள் தோன்றின. நான் தாமதமாக வந்ததால் என்மேல் நபி (ஸல்) கோபமாக இருக்கக் கூடும் என்று மனதிற்குள் கூறிக் கொண்டேன். பிறகு மறுபடியும் ஸலாம் கூறினேன். அவர்கள் பதில் கூறவில்லை. முன்பைவிடக் கடுமையாக சந்தேகங்கள் ஏற்பட்டன. பின்னர் மீண்டும் ஸலாம் கூறினேன். எனக்கு பதில் ஸலாம் கூறிவிட்டு நான் தொழுது கொண்டிருந்ததால்தான் உமக்குப் பதில் கூறவில்லை என்று கூறினார்கள். (நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்தபோது) கிப்லா அல்லாத திசையை நோக்கி தம் வாகனத்தின் மீதமர்ந்து தொழுது கொண்டிருந்தனர்.

புஹாரி 1217. ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி)

## 191.தொழுகையில் ஷைத்தான்

314- இஃப்ரீத் என்ற ஜின் நேற்றிரவு என் முன் திடீரெனத் தோன்றி என் தொழுகையைக் கெடுக்க முயன்றது. அதைப் பிடிப்பதற்கான சக்தியை இறைவன்

எனக்கு வழங்கினான். காலையில் நீங்கள் அனைவரும் அதைக் காண வேண்டும் என இந்தப் பள்ளி வாசலில் உள்ள ஒரு தூணில் அதைக் கட்டிவைக்க என்னினேன். இறைவா! எனக்குப் பின் வேறு எவருக்கும் நீ வழங்காத ஒரு ஆட்சியை எனக்கு நீ வழங்குவாயாக! (38:35) என்ற என் சகோதரர் சுலைமான் (அலை)அவர்களின் பிரார்த்தனை எனக்கு நினைவு வந்ததால் அதை விரட்டி அடித்து விட்டேன் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி461: அபூஹுரைரா (ரலி)

## 192.தொழும்போது குழந்தைகளை....

315- நபி (ஸல்) அவர்கள் தமது மகள் ஸைனப் அவர்களின் குழந்தை உமாமாவைத் (தோளில்) சுமந்து கொண்டு தொழுதிருக்கிறார்கள். ஸஜ்தாவுக்குச் செல்லும் போது இறக்கி விடுவார்கள். நிற்கும் போது தூக்கிக் கொள்வார்கள்.

புஹாரி516: அபூ கதாதா அல் அன்சாரி (ரலி)

## 193.நபியவர்களின் மிம்பர்!

316- நபி (ஸல்) அவர்களின் மிம்பர் எந்த மரத்தினாலானது என்று சர்ச்சை செய்த நிலையில் சில மனிதர்கள் ஸஹ்ல் பின் ஸஃது (ரலி) இடம் வந்து இது பற்றிக் கேட்டனர். அதற்கு ஸஹ்ல் பின் ஸஃது (ரலி) அல்லாஹ்வின் மீது ஆணையாக அது எந்த மரத்தினாலானது என்பதை நான் அறிவேன். அது தயாரிக்கப்பட்ட முதல் நாளிலேயே அதை நான் பார்த்துள்ளேன். நபி (ஸல்) அவர்கள் முதன் முதலில் அதில் அமர்ந்த நாளிலும் அதை நான் பார்த்திருக்கிறேன் என்று கூறிவிட்டுப் பின்வரும் நிகழ்ச்சியைக் கூறலானார்கள். நபி (ஸல்) அவர்கள் ஒரு பெண்மணியிடம் (அப்பெண்மணியின் பெயரையும் ஸஹ்ல் குறிப்பிட்டார்கள்) ஆளனுப்பி நான் மக்களிடம் பேசும் போது அமர்ந்து கொள்வதற்காகத் தச்சு வேலை தெரிந்த உன் வேலைக்காரரிடம் எனக்கொரு மேடை செய்து தரச் சொல்! எனச் சொல்லியனுப்பினார்கள். அப்பெண்மணி அவ்வாறே தம் ஊழியரிடம் கூறினார். மதீனாவின் சமீபத்தில் காபா எனும் பகுதியிலுள்ள கருவேல மரத்திலிருந்து அதைச் செய்து அவர் அப்பெண்ணிடம் கொண்டு வந்தார். உடனே அப்பெண் அதை நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டதற்கேற்ப இவ்விடத்தில் அது வைக்கப் பட்டது. அதன் பிறகு நபி (ஸல்) அவர்கள் அதன்

மீதே தொழுததை அதன் மீதே தக்பீர் கூறியதையும் அதன் மீதே ருகூவு செய்வதையும் அதன் பிறகு மிம்பரின் அடிப்பாகத்திற்குப் பின் பக்கமாக இறங்கி அதில் ஸஜ்தா செய்து விட்டு மீண்டும் மேலேறியதையும் நான் பார்த்துள்ளேன். தொழுது முடித்ததும் மக்களை நோக்கி மக்களே நீங்கள் அறிந்து கொள்வதற்காக நான் இவ்வாறு செய்தேன் என்று குறிப்பிட்டார்கள்.

புஹாரி917: அபூ ஹாஸிம் பின் தீனார் (ரலி)

## 194.தொழும்போது இடுப்பில் கை வைப்பது பற்றி..

317- ஒருவர் இடுப்பில் கை வைத்து தொழுவது தடுக்கப்பட்டுள்ளது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி 1220. அபூஹுரைரா (ரலி)

## 195.தொழுகையில் ஸஜ்தா செய்யுமிடத்தை சரிசெய்தல்..

318- ஸஜ்தாச் செய்யும்போது மண்ணைச் சமப்படுத்திய மனிதரை நோக்கி 'நீர் இவ்வாறு செய்வதென்றால் ஒரு முறை மட்டும் செய்வீராக என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி: 1207 முஐகீப் (ரலி)

## 196.தொழுகையின் போது துப்புதல் பற்றி..

319- நபி (ஸல்) அவர்கள் கிப்லா திசையில் உள்ள சுவற்றில் எச்சிலைக் கண்டார்கள். அதை சுரண்டி விட்டு மக்களை நோக்கி உங்களில் ஒருவர் தொழுதுக்கொண்டிருக்கும் போது தம் முகத்துக்கு எதிராக உமிழலாகாது: ஏனெனில் அவர் தொழும் போது இறைவன் அவருக்கு முன்னிலையில் இருக்கிறான் என்று கூறினார்கள்.

புஹாரி406:அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)

320- நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் சுவற்றில் (உமிழப் பட்டிருந்த) சளியைக் கண்டு சிறு கல்லை எடுத்து அதைச் சுறண்டினார்கள். பின்னர் உங்களில் எவர்க்கேனும் சளி உமிழ வேண்டிய அவசியம் ஏற்பட்டால் தம் முகத்துக்கு

நேராகவோ தம் வலப்புறமாகவோ உமிழலாகாது. தம் இடப்புறமோ தம் இடது பாதத்தின் அடியிலோ அவர் உமிழ்ந்துக் கொள்ளட்டும்! என்று கூறினார்கள்.

**புஹாரி410: அபூஸயித் அல் குத்ரீ (ரலி)**

321- நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் சுவற்றில் (உமிழப் பட்டிருந்த) சளியைக் கண்டு சிறு கல்லை எடுத்து அதைச் சுறண்டினார்கள். பின்னர் உங்களில் எவர்க்கேனும் சளி உமிழ வேண்டிய அவசியம் ஏற்பட்டால் தம் முகத்துக்கு நேராகவோ தம் வலப்புறமாகவோ உமிழலாகாது. தம் இடப்புறமோ தம் இடது பாதத்தின் அடியிலோ அவர் உமிழ்ந்துக் கொள்ளட்டும்! என்று கூறினார்கள்.

**புஹாரி409:அபூஹுரைரா (ரலி)**

322- நபி (ஸல்) அவர்கள் கிப்லாத் திசையில் உள்ள சுவற்றில் எச்சிலையோ சளியையோ கண்டு விட்டுச் சுரண்டி (அப்புறப் படுத்தி)னார்கள்.

**புஹாரி407: ஆயிஷா (ரலி)**

323- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக ஒரு மூமின் தொழுகையில் இருக்கும் போது தம் இறைவனிடம் அந்தரங்கமாக உரையாடுகிறார். எனவே தமது முன் புறமோ வலப்புறமோ அவர் உமிழ வேண்டாம். எனினும் இடப்புறமோ தம் காலுக்கடியிலோ உமிழலாம்.

**புஹாரி413: அனஸ் (ரலி)**

324- பள்ளிவாசலில் உமிழ்வது குற்றமாகும். அதை மண்ணுக்கடியில் மறைப்பது அதற்குரிய பரிகாரமாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி415: அனஸ் பின் மாலிக் (ரலி)**

## 197.காலணியுடன் தொழுதல்..

325- அனஸ் பின் மாலிக் (ரலி) இடம் நான் நபி (ஸல்) அவர்கள் செருப்பணிந்து தொழுதிருக்கிறார்களா? என்று கேட்டேன். ஆம் எனப் பதில் கூறினார்கள்.

**புஹாரி386: ஸயீது பின் யஸீதுல் அஸ்தி (ரலி)**

## 198.சித்திரங்களாலான ஆடையை....

326- கோடுகள் போடப்பட்ட ஒரு மேலாடை அணிந்து நபி (ஸல்) அவர்கள் தொழதார்கள். அதன் கோடுகள் என் கவனத்தை திருப்பிவிட்டன. இதை அபுஜஹ்மிடம் கொடுத்து விட்டு மற்றொரு ஆடையைக் கொண்டு வாருங்கள்! என்று கூறினார்கள்.

**புஹாரி752: ஆயிஷா (ரலி)**

## 199.தொழுகைக்கு முன் உணவு தயாராக இருந்தால்..

327- இரவு உணவு உங்களுக்கு முன் வைக்கப்பட்டுக் கொண்டிருக்கத் தொழுகைக்கு 'இகாமத்' சொல்லப்பட்டால், முதலில் உணவை உண்ணுங்கள். (பிறகு தொழச் சொல்லுங்கள்) என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி: அனஸ் பின் மாலிக் (ரலி)**

328- இரவு நேர உணவு தயாராகி விடுமானல் ம..ரிபுத் தொழுகையைத் தொழுவதற்கு முன்னால் இரவு உணவை அருந்துங்கள். உங்கள் உணவை(த் தொழுகையை விட) முற்படுத்துங்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி672: அனஸ் (ரலி)**

329- இரவு நேர உணவு வைக்கப்பட்டுத் தொழுகைக்காக இகாமத்தும் சொல்லப் படுமானால் நீங்கள் உணவை முதலில் அருந்துங்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி671: ஆயிஷா (ரலி)**

330- உங்களில் ஒருவருடைய இரவு உணவு வைக்கப்பட்டு, (ம..ரிபுத்) தொழுகைக்கு இகாமத்தும் சொல்லப்பட்டு விடுமானால் முதலில் உணவை அருந்துங்கள். உணவை உண்டு முடிவது வரை (தொழுகைக்காக) அவசரப்பட வேண்டாம் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி673: இப்னு உமர் (ரலி)**

## 200.வெள்ளைப்பூண்டு வெங்காயம் உண்பது பற்றி..

331- யார் இந்த (வெங்காயச்) செடியிலிருந்து சாப்பிடுகிறாரோ அவர் நமது பள்ளியை நெருங்க வேண்டாம் என்று கைபர் போரின் போது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி853: இப்னு உமர் (ரலி)

332- ஒரு மனிதர் அனஸ் (ரலி) இடம் வெங்காயம் பற்றி நபி (ஸல்) அவர்கள் என்ன கூறியிருக்கிறார்கள் என்று கேட்டார். அதற்கு அனஸ் (ரலி) யார் அந்தச் செடியிலிருந்து (விளைவதை) உண்ணுகிறாரோ அவர் நம்மை நெருங்க வேண்டாம் அல்லது நம்முடன் தொழ வேண்டாம் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் எனக் குறிப்பிட்டார்கள்.

புஹாரி856: அப்துல் அஸீஸ் (ரலி)

333- யார் பூண்டு, வெங்காயம் ஆகியவற்றைச் சாப்பிடுகிறாரோ அவர் நமது பள்ளியை விட்டு விலகி அவரது இல்லத்திலேயே அமர்ந்து கொள்ளட்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஒரு முறை) நபி (ஸல்) அவர்களிடம் பல விதமான துர்வாடையுடைய தாவரங்கள் கொண்டு வரப் பட்டன. அது பற்றி நபி (ஸல்) அவர்கள் விபரம் கேட்ட போது அதில் உள்ள கீரை வகைகள் பற்றி விளக்கம் தரப்பட்டது. தம்முடன் இருந்த ஒரு தோழருக்கு அதைக் கொடுக்குமாறு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அந்தத் தோழர் சாப்பிட விரும்பாமலிருப்பதைக் கண்ட போது நீர் உண்ணுவீ ராக நீர் சந்திக்காத (பல விதமான) மக்களிடம் நான் தனிமையில் உரையாட வேண்டியுள்ளது. (இதன் காரணமாகவே நான் சாப்பிடவில்லை) என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி855: ஜாபிர் (ரலி)

## 201.தொழுகையில் ஸஜ்தா ஸஹ்வு செய்தல்..

334- தொழுகைக்காக பாங்கு சொல்லப்பட்டால் பாங்கு சப்தம் தனக்குக் கேட்காமலிருப்பதற்காக ஷைத்தான் பின் துவாரத்தின் வழியாகக் காற்றுவிட்டவனாக ஓடி விடுகிறான். பாங்கு முடிந்ததும் திரும்பி வந்து இகாமத் கூறப்பட்டதும் மீண்டும் ஓடுகிறான். இகாமத் முடிந்ததும் மீண்டும் வந்து

தொழுபவரின் உள்ளத்தில் ஊடுருவி 'இதை இதையெல்லாம் நினைத்துப்பார்' எனக் கூறி, அவர் இதுவரை நினைத்துப் பார்த்திராதவற்றையெல்லாம் நினைவூட்டி அவர் எத்தனை ரக்அத்கள் தொழுதார் என்பதை மறக்கடிக்கிறான். உங்களில் ஒருவருக்குத் தாம் தொழுத ரக்அத்களில் மூன்றா அல்லது நான்கா என்று தெரியாவிட்டால் (கடைசி) இருப்பில் இரண்டு ஸஜ்தாச் செய்து கொள்ளட்டும்' இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூஹுரைரா (ரலி) அறிவித்தார்.

**புஹாரி: 1231 அபூஹுரைரா (ரலி)**

335- அப்துல்லாஹ் இப்னு புஹைனா (ரலி) அறிவித்தார். நபி (ஸல்) அவர்கள் எங்களுக்கு ஏதோ ஒரு தொழுகையைத் தொழுகை நடத்தினார்கள். (அத்தொழுகையில்) இரண்டு ரக்அத்தை முடித்தபோது அமராமல் (மூன்றாவது ரக்அத்துக்காக) எழுந்துவிட்டார்கள். எனவே, மக்களும் நபி (ஸல்) அவர்களோடு எழுந்துவிட்டார்கள். தொழுகை முடியும் தருவாயில் நாங்கள் நபி (ஸல்) அவர்கள் ஸலாம் கொடுப்பதை எதிர்பார்த்திருந்தபோது, அந்த இருப்பிலேயே ஸலாத்திற்கு முன் தக்பீர் கூறி, இரண்டு ஸஜ்தாக்கள் செய்துவிட்டு ஸலாம் கொடுத்தார்கள்.

**புஹாரி:1224**

336- நபி (ஸல்) அவர்கள் ஒரு தடவை தொழுதார்கள்-கூட்டினார்களா குறைத்தார்களா என்பது எனக்குத் தெரியாது என இப்ராஹிம் கூறுகிறார்- தொழுகையை முடித்து ஸலாம் கூறிய பின் அல்லாஹ்வின் தூதரே! தொழுகையில் ஏதாவது மாற்றம் ஏற்பட்டுள்ளதா? என்று கேட்கப்பட்டது. அது என்ன? என நபி (ஸல்) அவர்கள் வினவினார்கள். உடனே நீங்கள் இப்படியல்லவா தொழுதீர்கள், என அங்கிருந்தோர் கூறினர். (நீட்டியிருந்த) தமது கால்களை நபி (ஸல்) மடக்கி, கிப்லாவை முன்னோக்கி இரண்டு ஸுஜுது செய்துவிட்டு பின்னர் ஸலாம் சொன்னர்கள். இதன் பின்னர் அவர்கள் எங்களை முன்னோக்கித் திரும்பியமர்ந்து, தொழுகையில் ஏதாவது மாற்றங்கள் செய்யப் படுமானால் அதை நான் உங்களுக்குத் தெரிவித்து விடுவேன். என்றாலும்

நானும் உங்களைப் போன்ற ஒரு மனிதன் தான். நீங்கள் மறந்து விடுவதைப் போன்று நானும் மறந்து விடுவேன். நான் (எதையாவது) மறந்து விட்டால் எனக்கு ஞாபகப் படுத்துங்கள். உங்களில் ஒருவர் தமது தொழுகையில் சந்தேகித்தால் உறுதியானதை அவர் தீர்மானிக்கட்டும். அத்தீர்மானத்தின் அடிப்படையில் தொழுகையைப் பூர்த்தி செய்து ஸலாம் சொல்லிய பின் இரண்டு ஸுஜுது செய்யட்டும் என கூறினார்கள்.

புஹாரி401:அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரலி)

337-(ஒரு நாள்) நபி (ஸல்) அவர்கள் எங்களுக்கு (நான்கு ரக்அத் தொழுகையான) லுஹ்ர் தொழுகையை (மறந்து) இரண்டு ரக்அத்களாகத் தொழுகை நடத்திவிட்டு ஸலாம் கொடுத்துவிட்டார்கள். பிறகு எழுந்து பள்ளிவாசலின் தாழ்வாரத்திலிருந்த (பேரீச்சங்) கட்டையினை நோக்கிச் சென்று அதன் மீது தம் கையை வைத்து (நின்று) கொண்டார்கள். அன்று (பள்ளிவாசலில் இருந்த) மக்களில் அபூபக்ர் (ரலி) அவர்களும் உமர் (ரலி) அவர்களும் இருந்தனர். ஆனால், அவர்கள் இருவரும் நபி (ஸல்) அவர்களிடம் (அது குறித்துப்) பேச அஞ்சினர். மக்களில் சிலர் வேகமாக வெளியேறிச் செல்லலாயினர். அப்போது அவர்கள் '(தொழுகை(யின் ரக்அத்) குறைந்துவிட்டதா?' என்று பேசிக்கொண்டனர். மக்களில் ('ம்ர்பாக்' எனும் இயற்பெயருடைய) ஒருவரும் இருந்தார். அவரை நபி (ஸல்) அவர்கள் 'இரண்டு கைக்காரர்' (துல் யதைன்) என்று அழைப்பது வழக்கம். அவர், 'அல்லாஹ்வின் நபியே! தாங்கள் மறந்து விட்டீர்களா? அல்லது தொழுகை(யின் ரக்அத்) குறைந்துவிட்டதா?' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள், '(என் எண்ணப் படி) நான் மறக்கவுமில்லை. தொழுகை குறைந்துவிடவுமில்லை' என்று கூறினார்கள். அவர், 'இல்லை; தாங்கள் மறந்துவிட்டீர்கள், இறைத்தூதர் அவர்களே!' என்று கூறினார். 'இரண்டு கைக்காரர் (துல்யதைன்) சொல்வது உண்மையா?' என (மக்களிடம்) நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். (மக்களும் உண்மையே என்று தெரிவித்தனர்.) பிறகு நபி(ஸல்) அவர்கள் எழுந்து இன்னும் இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தி 'சலாம்' கொடுத்தார்கள். பிறகு தக்பீர் ('அல்லாஹு அக்பர் -அல்லாஹ் மிகப் பெரியவன்' எனக்) கூறி 'முன்பு செய்ததைப் போன்று' அல்லது 'அதை விடவும் நீண்ட' (மறதிக்கான) சிரவணக்கம்

(சஜ்தா) செய்தார்கள். பின்னர் (சிரவணக்கத்திலிருந்து) எழுந்து 'தக்பீர்' கூறினார்கள். பின்னர் மீண்டும் 'முன்பு செய்ததைப் போன்று' அல்லது 'அதைவிட நீளமாக' சிரவணக்கம் செய்தார்கள். பின்னர் தலையை உயர்த்தி 'தக்பீர்' கூறினார்கள்.

புஹாரி6051: அபூஹுரைரா (ரலி)

## 202.சில குர்ஆனிய வசனங்களுக்கு ஸஜ்தா செய்தல்..

338- நபி (ஸல்) அவர்கள் ஸஜ்தாச் செய்யும் வசனத்தை எங்களுக்கு ஓதிக் காட்டும் போது அவர்கள் ஸஜ்தாச் செய்வார்கள். எங்களுக்கு நெற்றியை வைக்க இடமில்லாத அளவுக்கு நாங்கள் அனைவரும் ஸஜ்தாச் செய்வோம்.

புஹாரி 1075 இப்னு உமர் (ரலி)

339- இப்னு மஸ்வூத் (ரலி) கூறியதாவது: நபி (ஸல்) அவர்கள் மக்காவில் நஜ்மு அத்தியாயத்தை ஓதும் போது ஸஜ்தாச் செய்தார்கள். ஒரு முதியவரைத் தவிர அவர்களுடன் இருந்த அனைவரும் ஸஜ்தாச் செய்தனர். அம்முதியவர் ஒரு கையில் சிறிய கற்களையோ மண்ணையோ எடுத்துத் தமது நெற்றிக்குக்கொண்டு சென்று இவ்வாறு செய்வது எனக்குப் போதும் என்று கூறினார். பின்னர் அவர் காபிராகக் கொல்லப்பட்டதை நான் பார்த்தேன்.

புஹாரி 1067 .

340- ஸைத் பின் ஸாபித் (ரலி) கூறியதாவது: நான் நபி (ஸல்) அவர்களிடம் நஜ்மு அத்தியத்தை ஓதிக் காட்டினேன். அப்போது அவர்கள் ஸஜ்தாச் செய்யவில்லை.

புஹாரி 1072

341- அபூஹுரைரா (ரலி)வுடன் நான் இஷாத்தொழுதபோது 'இதஸ்ஸமாவும் ஷக்கத்' என்ற அத்தியாயத்தை ஓதி (அதில் ஸஜ்தாவுடைய இடம் வந்ததும்) ஸஜ்தாச் செய்தார்கள். இது பற்றி நான் அவர்களிடம் கேட்டபோது நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் (இந்த அத்தியாயத்திற்காக) நான் ஸஜ்தாச் செய்திருக்கிறேன். (மறுமையில்) அவர்களை சந்திக்கும்வரை (அதாவது

மரணிக்கும்வரை) நான் அதை ஒதி ஸஜ்தாச் செய்து கொண்டுதான் இருப்பேன். என்று கூறினார்கள்.

புஹாரி768: அபூ ராஃபிவு (ரலி)

## 203.தொழுகையை முடித்ததும் தக்பீர் கூறுதல்..

342- நபி (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்து விட்டார்கள் என்பதைத் தக்பீர் மூலம் நான் அறிந்து கொள்வேன்.

புஹாரி842: இப்னு அப்பாஸ் (ரலி)

## 204.கப்ர் வேதனையிலிருந்து பாதுகாப்பு தேடுதல்..

343- மதீனா யூத மூதாட்டிகளில் இருவர் என்னிடம் வந்து (பேசிக் கொண்டிருந்தபோது) 'மண்ணறை வாசிகள் மண்ணறைகளில் வேதனை செய்யப்படுகின்றனர்' என்று கூறினர். அவர்கள் கூறியதை நம்புவது எனக்குச் சரியாகப் படவில்லை. பிறகு அவர்கள் இருவரும் வெளியேறிவிட்டனர். நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அப்போது நான், 'இறைத்தூதர் அவர்களே! இரண்டு மூதாட்டிகள் (என்னிடம் வந்து இப்படி இப்படிச் சொன்னார்கள்) என்று அவர்களிடம் தெரிவித்தேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'இருவரும் உண்மையே சொன்னார்கள். (மண்ணறையிலிருக்கும் பாவிகள்) கடுமையாக வேதனை செய்யப்படுகிறார்கள். அந்த வேதனை(யால் அவதியுறும் அவர்களின் அலறல்)தனை எல்லா மிருகங்களும் செவியேற்கின்றன" என்றார்கள். அதற்குப் பின் நபி (ஸல்) அவர்கள் எல்லாத் தொழுகைகளிலும் மண்ணறையின் வேதனையிலிருந்து (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோராமல் இருந்ததில்லை.

புஹாரி 6366. ஆயிஷா (ரலி)

## 205.அல்லாஹ்விடம் பாதுகாப்பு கோரும் விஷயங்கள்..

344- நபி (ஸல்) அவர்கள் தமது தொழுகையில் தஜ்ஜாலின் குழப்பத்தை விட்டும் பாதுகாப்புத் தேடுவதை நான் செவியுற்றுள்ளேன்.

புஹாரி833: ஆயிஷா (ரலி)

345- இறைவா! கப்ருடைய வேதனையை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். தஜ்ஜாலின் குழப்பத்தை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். வாழும் போதும் மரணிக்கும் போதும் ஏற்படும் குழப்பத்தை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். பாவங்களை விட்டும் கடனை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று நபி (ஸல்) அவர்கள் தொழுகையில் துஆச் செய்வார்கள். தாங்கள் கடனை விட்டும் அதிகமாகப் பாதுகாப்புத் தேடும் காரணம் என்ன? என்று ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டபோது ஒரு மனிதன் கடன் படும் போது பொய் பேசுகிறான்; வாக்களித்து விட்டு அதை மீறுகிறான் என்று நபி (ஸல்) அவர்கள் விளக்கமளித்தார்கள்.

புஹாரி832: ஆயிஷா (ரலி)

346- நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வே! நிச்சயமாக நான் மண்ணறை வேதனை, நரக வேதனை, வாழ்வின் சோதனை, மரணத்தின் சோதனை, மஸீஹுத் தஜ்ஜாலின் சோதனை ஆகியவற்றிலிருந்து உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்" எனப் பிரார்த்திப்பவர்களாக இருந்தார்கள்.

புஹாரி 1377. அபூஹுரைரா (ரலி)

## 206.தொழுகையை முடித்ததும் செய்யும் திக்ருகள்..

347- வணக்கத்திற்குரியவன் அல்லாஹுவைத் தவிர எவரும் இல்லை. அவன் ஏகன் அவனுக்கு நிகராக எவருமில்லை. ஆட்சி அவனுக்குரியது. புகழும் அவனுக்குரியது. அவன் அனைத்து பொருட்களின் மீதும் ஆற்றல் உள்ளவன். இறைவா! நீ கொடுப்பதைத் தடுப்பவன் இல்லை. நீ தடுத்ததைக் கொடுப்பவன் இல்லை. எந்த மதிப்பு உடையவனும் உன்னிடம் எந்தப் பயனும் அளிக்க முடியாது என்று நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு கடமையான தொழுகைக்குப் பின்பும் கூறக் கூடியவர்களாக இருந்தனர்.

புஹாரி844: முகிரா பின் ஷுஃபா (ரலி)

348- ஏழை மக்கள் சிலர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து பொருளாதாரச் செல்வம் பெற்றவர்கள் உயர்வான பதவிகளையும் நிலையான பாக்கியத்தையும் பெற்றுக்

கொள்கிறார்கள். நாங்கள் தொழுவது போலவே அவர்களும் தொழுகிறார்கள். மேலும் நாங்கள் நோன்பு வைப்பது போலவே அவர்களும் நோன்பு நோற்கின்றனர். ஆயினும் அவர்களுக்குப் பொருளாதாரச் சிறப்பு இருப்பதனால் தங்கள் பொருளாதாரத்தின் மூலம் ஹஜ் செய்கின்றனர்; உம்ராச் செய்கின்றனர்; தர்மமும் செய்கின்றனர். (ஏழைகளாகிய நாங்கள் இவற்றைச் செய்ய முடிவதில்லை) என்று முறையிட்டனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள் நான் உங்களுக்கு ஒரு காரியத்தைக் கற்றுத் தருகிறேன். அதை நீங்கள் செய்து வந்தால் உங்களை முந்தி விட்டவர்களை நீங்களும் பிடித்து விடுவீர்கள் உங்களுக்குப் பிந்தி வருபவர்கள் உங்களைப் பிடிக்க இயலாது. நீங்கள் எந்த மக்களுடன் வாழ்கிறீர்களோ அவர்களும் அந்தக் காரியத்தைச் செய்தால் தவிர அவர்களில் நீங்கள் மிகச் சிறந்தவராவீர்கள் (அந்தக் காரியமாவது) ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் 33 தடவை இறைவனைத் துதியுங்கள், 33 தடவை இறைவனைப் புகழுங்கள், 33 தடவை இறைவனைப் பெருமைப் படுத்துங்கள் என்று கூறினார்கள். நாங்கள் இந்த விஷயத்தில் பலவாறாகக் கூறிக் கொண்டோம். சிலர் ஸுப்ஹானல்லாஹ் 33 தடவையும், அல்ஹம்துலில்லாஹ் 33 தடவையும் அல்லாஹு அக்பர் 33 தடவையும் கூறலானோம். நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்று இது பற்றி கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் ஸுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில்லாஹி வல்லாஹு அக்பர் என்று 33 தடவை கூறுங்கள். இதனால் ஒவ்வொரு வார்த்தையையும் 33 தடவைகள் கூறியதாக அமையும் என்று விளக்கம் தந்தார்கள்.

புஹாரி843: அபூஹுரைரா (ரலி)

## 207.தொழுகைக்கு தக்பீர் கட்டியதும் என்ன ஓதுவது?

349- நபி (ஸல்) அவர்கள் தக்பீருக்கும் கிராஅத்துக்கும் இடையே சற்று நேரம் மவுனமாக இருப்பார்கள். அல்லாஹ்வின் தூதரே! என் தந்தை தாய் தங்களுக்கு அர்ப்பணம். தக்பீருக்கும் கிராஅத்துக்குமிடையே நீங்கள் மவுனமாக இருக்கும் சமயத்தில் என்ன கூறுவீர்கள்? என்று நான் கேட்டேன். இறைவா! கிழக்குக்கும் மேற்குக்குமிடையே நீ ஏற்படுத்திய தூரத்தைப் போல், எனக்கும் என் தவறுகளுக்குமிடையே நீ தூரத்தை ஏற்படுத்துவாயாக! இறைவா!

வெண்மையான ஆடை அழுக்கிலிருந்து தூய்மைப்படுத்தப் படுவது போல் என் தவறுகளை விட்டும் என்னைத் தூய்மைப் படுத்துவாயாக! தண்ணீராலும் பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் என் தவறுகளைக் கழுவுவாயாக! என்று நான் கூறுவேன் என்றார்கள்.

புஹாரி744: அபூஹுரைரா (ரலி)

## 208.ஜமாஅத் தொழுகைக்கு ஓடி வருதல் கூடாது..

350- தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டால் ஓடி வராதீர்கள். நடந்தே வாருங்கள். நிதானத்தைக் கடைப் பிடியுங்கள். கிடைத்ததைத் தொழுங்கள். தவறியதைப் பூர்த்தி செய்யுங்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி908: அபூஹுரைரா (ரலி)

351- நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் தொழுது கொண்டிருந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் சிலர் வேகமாக வரும் சப்தத்தைச் செவியுற்றார்கள். தொழுகையை முடித்ததும் உங்களுக்கு என்ன? (இவ்வளவு வேகமாக வந்தீர்கள்) என்று அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு (ஜமாஅத்) தொழுகைக்காக விரைந்து வந்தோம் என்று பதில் கூறினர். அவ்வாறு செய்யாதீர்கள் தொழுகைக்கு வரும் போது அமைதியான முறையில் வாருங்கள். உங்களுக்கு கிடைத்த ரக்அத்களை ஜமாஅத்துடன் தொழுங்கள். உங்களுக்கு தவறி போனதைப் பூர்த்தி செய்யுங்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி635: அபூகதாதா (ரலி)

## 209.தொழுகைக்கு முன் மறந்து விட்டது நினைவிற்கு வந்தால்...

352- (ஒரு நாள்) தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டது. வரிசைகள் சரி செய்யப்பட்டன. நபி (ஸல்) அவர்கள் வீட்டிலிருந்து வெளியே வந்தார்கள் தொழுகைக்காக அவர்களுடைய இடத்தில் போய் நின்றதும் குளிப்பு கடமையானது நினைவிற்கு வந்ததால் எங்களைப் பார்த்து உங்களுடைய இடத்திலேயே நில்லுங்கள், என்று சொல்லி விட்டு (வீட்டிற்குள் சென்றார்கள். பின்னர் அவர்கள் குளித்து விட்டுத் தலையிலிருந்து தண்ணீர் சொட்டச் சொட்ட

வந்தார்கள். தக்பீர் சொல்லித் தொழுகை நடத்தினார்கள். நாங்கள் அவர்களுடன் தொழுதோம்.

புஹாரி275:அபூஹுரைரா (ரலி)

## 210.தொழுகையின் நேரத்தில் அதன் ஒரு ரக்அத்தைப் பெற்றவர்

353- தொழுகையில் ஒரு ரக்அத்தை (அதற்குரிய நேரத்தில்) அடைந்து கொள்பவர் அந்தத் தொழுகையை அடைந்து கொள்கிறார் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி580: அபூஹுரைரா (ரலி)

354- 'ஜிப்ரீல் (அலை) (வானிலிருந்து) இறங்கி, எனக்குத் தொழுகை நடத்த, நான் அவருடன் தொழுதேன். பிறகு (இரண்டாம் முறையாக) அவருடன் தொழுதேன். பிறகு (மூன்றாம் முறையாக) அவருடன் தொழுதேன். பிறகு (நான்காம் முறையாக) அவருடன் தொழுதேன். பிறகு (ஐந்தாம் முறையாக) அவருடன் தொழுதேன்' என்று தம் விரல்களால் ஐந்து தொழுகைகளை எண்ணியபடி இறைத்தூதர் (ஸல்) அவர்கள் சொல்ல கேட்டேன்" என்று தம் தந்தை அபூ மஸ்வூத் (ரலி) சொல்லக் கேட்டதாக பஷீர் இப்னு அபீ மஸ்வூத் (ரஹ்) சொல்ல செவியுற்றேன்" என்றார்கள்.

புஹாரி: 3221 அபிமஸ்வூத் (ரலி)

355- உமர் பின் அப்துல் அஸீஸ் ஒருநாள் தொழுகையைத் தாமதப் படுத்தி விட்டார்கள். அப்போது அபூ மஸ்வூத் அல் அன்ஸாரி (ரலி) அவரிடம் வந்து, முகீராவே! இது என்ன? ஜிப்ரீல் (அலை) அவர்கள் இறங்கி (ஃபஜ்ரு) தொழ, நபி (ஸல்) அவர்களும் தொழுதார்கள். பின்பு (லுஹர்) தொழ, நபி (ஸல்) அவர்களும் தொழுதார்கள். பின்பு (அஸர்) தொழ, நபி (ஸல்) அவர்களும் தொழுதார்கள். பின்பு (மஃரிப்) தொழ, நபி (ஸல்) அவர்களும் தொழுதார்கள். பின் (இஷா) தொழு, நபி (ஸல்) அவர்களும் தொழுதார்கள். பின்னர் நபியிடம் இந்நேரங்களில் தொழ வேண்டும் என்றே உமக்குக் கட்டளையிடப் பட்டள்ளது எனவும் ஜிப்ரீல் (அலை) அவர்கள் கூறினார்கள். இதை நீ அறியவில்லையா? என்று கேட்டார்கள். (இந்த நிகழ்ச்சியை உர்வா பின் ஸுபைர் உமர் பின் அப்துல் அஸீஸ் அவர்களிடம் கூறிய போது) உர்வாவே நீர் கூறுவது என்னவென்பதைக் கவனித்துப் பாரும்!

நபி (ஸல்) அவர்களுக்குத் தொழுகையின் நேரத்தை ஜிப்ரீல் (அலை) அவர்கள் நிர்ணயித்தார்களா? என்று உமர் இப்னு அப்துல் அஸீஸ் கேட்டார்கள்.

புஹாரி521: ஸுஹ்ரி (ரஹ்)

356- சூரிய(னி)ன் (ஒளி) என் அறையில் (மறையாமல்) விழுந்து கொண்டிருக்கும் போது நபி (ஸல்) அவர்கள் அஸர் தொழுவார்கள்.

புஹாரி522: ஆயிஷா (ரலி)

## 211.லுஹர் தொழுகையின் நேரம்..

357- வெப்பம் கடுமையாகும் போது (வெப்பம் தணியும் வரை) லுஹரைத் தாமதப் படுத்துங்கள்! ஏனெனில் கடுமையான வெப்பம் நரகத்தின் வெப்பக் காற்றின் வெளிப்பாடாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி534: அபூஹுரைரா (ரலி)

358- நபி (ஸல்) அவர்களின் முஅத்தின் லுஹருக்கு பாங்கு சொல்ல முற்பட்டபோது நபி (ஸல்) அவர்கள் கொஞ்சம் பொறு; கொஞ்சம் பொறு, என்று கூறிவிட்டு, கடுமையான வெப்பம் நரகத்தின் வெப்பக் காற்றின் வெளிப்பாடாகும். எனவே வெப்பம் கடுமையாகும் போது (லுஹர்) தொழுகையைத் தாமதப் படுத்துங்கள் என்றார்கள். மணல் திட்டுகளில் நிழலை நாங்கள் பார்க்கும் வரை நபி (ஸல்) அவர்கள் தாமதப் படுத்துவார்கள். (சூரியன் நன்றாகச் சாய்ந்து அஸருக்குச் சற்று முன்பாகத் தான் மணல் திட்டுகளின் நிழல் தென்படும்.

புஹாரி535: அபூதர் (ரலி)

359- இறைவா! எனது ஒரு பகுதி, மறுபகுதியைச் சாப்பிட்டு விட்டது என்று நரகம் இறைவனிடம் முறையிட்டது. கோடையில் ஒரு மூச்சு விடுவதற்கும் குளிரில் ஒரு மூச்சு விடுவதற்கும் இறைவன் அதற்கு அனுமதி வழங்கினான். கோடை காலத்தில் நீங்கள் காணும் கடுமையான வெப்பமும் குளிர் காலத்தில் நீங்கள் உணரும் கடும் குளிரும் அதன் வெளிப்பாடுகள் தாம் என நபி (ஸல் ) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி537: அபூஹுரைரா (ரலி)

## 212.அதிக வெப்பமில்லாத நாட்களில் ளுஹரை துரிதமாக்குதல்..

360- கடுமையான வெப்பத்தில் நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் தொழுதிருக்கிறோம். எங்களில் ஒருவருக்கும் தம் முகத்தைத் தரையில் வைக்க இயலாவிட்டால் தமது ஆடையை விரித்து அதில் ஸஜ்தாச் செய்வார்.

புஹாரி 1208: அனஸ் பின் மாலிக் (ரலி)

## 213.அஸர் தொழுகையின் நேரங்கள்..

361- சூரியன் உயரத்தில் ஒளி வீ சிக்கொணடிருக்கும் போது நபி (ஸல்) அவர்கள் அஸர் தொழுபவர்களாக இருந்தனர். மேட்டுப் பாங்கான பகுதிக்குச் செல்பவர் அங்கே சென்றடையும் போது சூரியன் உயரத்திலேயே இருக்கும். சில மேட்டுபாங்கான பகுதிகள் மதீனாவிலிருந்து நான்கு மைல் அல்லது கிட்டத்தட்ட அந்த அளவு தூரத்தில் அமைந்திருந்தன.

புஹாரி550: அனஸ் பின் மாலிக் (ரலி)

362- நாங்கள் உமர்பின் அப்துல் அஜீஸுடன் லுஹர் தொழுதோம். பின்னர் (அங்கிருந்து) புறப்பட்டு அனஸ் பின் மாலிக் (ரலி) இடம் சென்ற போது அவர்கள் அஸர் தொழுது கொண்டிருக்கக் கண்டோம். என் தந்தையின் உடன் பிறந்தவரே! இப்போது நீங்கள் தொழுதது என்ன தொழுகை? என்று நான் கேட்டேன். அதற்கு அவர்கள் அஸர் தொழுகை! நபி (ஸல்) அவர்களுடன் இவ்வாறே நாங்கள் தொழுபவர்களாக இருந்தோம் என்றார்கள்.

புஹாரி549 அபூ உமாமா (ரலி)

363- நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் அஸர் தொழுகை தொழுதுவிட்டு, ஒட்டகத்தை அறுப்போம். அது பத்துப் பங்குகளாகப் பங்கு போடப்படும். சூரியன் மறைவதற்கு முன் நாங்கள் (அதன்) சமைக்கப்பட்ட இறைச்சியை உண்போம்.

புஹாரி: 2485. ராஃபிஉ இப்னு கதீஜ் (ரலி)

## 214.நடுத்தொழுகை என்பது எது?

364- யாருக்கு அஸர் தொழகை தவறிவிட்டதோ அவன் குடும்பமும் சொத்துக்களும் அழிக்கப்பட்டவனைப் போன்று இருக்கிறான் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி552: இப்னு உமர் (ரலி)

365- அஹ்ஸாப் (அரபுக் குலங்கள் அனைத்தும் ஒன்று திரண்டு தாக்க வந்த அகழ்ப்) போரின்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'அல்லாஹ் (எதிரிகளுடைய) வீ டுகளையும்புதைகுழிகளையும் நெருப்பால் நிரப்புவனாக! அவர்கள் சூரியன் மறையும் நேரம்வரை நடுத்தொழுகை(யான அஸர் தொழுகை)யிலிருந்து நம்முடைய கவனத்தைத் திருப்பிவிட்டார்கள்" என்று கூறினார்கள்.

**புஹாரி: 2931 அலி (ரலி)**

366- அகழ்போரின் போது சூரியன் மறைந்தபின் உமர் (ரலி) குரைஷிக் காபிர்களை ஏசிக் கொண்டே வந்து அல்லாஹ்வின் தூதரே! சூரியன் மறையும் வரை நான் அஸர் தொழவில்லையே என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் மீது ஆணையாக! நானும் அஸர் தொழவில்லை என்று கூறினார்கள். நாங்கள் புத்ஹான் எனும் பள்ளத்தாக்கை நோக்கிச் சென்றோம். நபி (ஸல்) அவர்கள் அஸர்தொழுகைக்காக உளூ செய்தார்கள். நாங்களும் அதற்காக உளூ செய்தோம். சூரியன் மறைந்த பின் அஸர் தொழுதார்கள். பின்னர் மஃரிபு தொழுதார்கள்.

**புஹாரி596: ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி)**

## 215.ஸுப்ஹு அஸர் தொழுகையின் மகத்துவம்.

367- இரவு நேரத்து வானவர்களும் பகல் நேரத்து வானவர்களும் தொடர்ந்து உங்களிடம் ஒருவர் பின் ஒருவராக வந்து கொண்டிருப்பார்கள். பஜ்ருத் தொழுகையிலும் அஸர் தொழுகையிலும் இரு சாராரும் சந்திக்கின்றனர். பின்னர் உங்களுடன் இரவு தங்கியவர்கள் மேலேறிச் செல்கின்றனர். என் அடியார்களை எந்த நிலையில் விட்டு வந்தீர்கள்? என்ற அவர்களிடம் இறைவன் இது பற்றி தெரிந்து கொண்டே விசாரிப்பான். அவர்கள் தொழுது கொண்டிருக்கும் போதே அவர்களிடம் சென்றோம். அவர்கள் தொழுது கொண்டிருக்கும் போதே அவர்களை விட்டு விட்டு வருகிறோம் என்று அவர்கள் விடையளிப்பார்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**புஹாரி555: அபூஹுரைரா (ரலி)**

368- நாங்கள் முழு நிலவுள்ள இரவில் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள் முழு நிலவை நோக்கி இந்த நிலவை நீங்கள் நெருக்கடியின்றிக் காண்பது போல் நிச்சயமாக உங்கள் இறைவனைக் காண்பீர்கள்! சூரியன் உதிக்கும் முன்னரும் சூரியன் மறையும் முன்னரும் தொழும் விஷயத்தில் (தூக்கம் போன்றவற்றால்) நீங்கள் மிகைக்கப்படாதிருக்க இயலுமானால் அதைச் செய்யுங்கள்! என்று கூறிவிட்டு சூரியன் உதிக்கும் முன்னரும் மறையும் முன்னரும் உமது இறைவனின் புகழைத் துதிப்பீராக! (அல்குர்ஆன் 50:39) என்ற இறை வசனத்தையும் ஓதிக் காண்பித்தார்கள்.

புஹாரி554: ஜரீர் (ரலி)

369- பகலின் வெப்பம் குறைந்த இரண்டு நேரத் தொழுகைகளை (அதாவது ஃபஜ்ரு, அஸர் தொழுகைகளை) யார் தொழுகிறாரோ அவர் சுவர்க்கத்தில் நுழைவார் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

புஹாரி574: அபூமூஸா (ரலி)

## 216.மக்ரிப் தொழுகையின் நேரம்..

370- சூரியன் அடிவானத்தில் மறைந்ததும் நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் மஃரிப் தொழுபவர்களாக இருந்தோம்.

புஹாரி561: ஸலமா (ரலி)

371- நபி (ஸல்) அவர்களுடன் மஃரிபைத் தொழுது விட்டு எங்களில் ஒருவர் திரும்பி அம்பு எய்தால் அவர் அம்பு விழும் இடத்தைப் பார்க்க முடியும். (அதாவது அந்த அளவு வெளிச்சம் இருக்கும்)

புஹாரி559: ராபிவு பின் கதீஜ் (ரலி)

## 217.இஷா தொழுகையின் நேரம்..

372- இஸ்லாம் (நன்கு) பரவுவதற்கு முன்னர் நபி (ஸல்) அவர்கள் ஒரு இரவு இஷாவைப் பிற்படுத்தினார்கள். பெண்களும், சிறுவர்களும் உறங்கிவிட்டனர் என உமர் (ரலி) தெரிவிக்கும் வரை நபி (ஸல்) அவர்கள் (தொழுவிக்க) வரவில்லை. அதன் பின் வந்து பள்ளியிலுள்ளவர்களை நோக்கி இப்பூமியில் உள்ளவர்களில்

உங்களைத் தவிர வேறு எவரும் இதை எதிர்பார்த்துக் காத்திருக்கவில்லை என்றார்கள்.

புஹாரி566: ஆயிஷா (ரலி)

373- நபி (ஸல்) அவர்கள் தம் அலுவல் காரணமாக ஒரு இரவு இஷாவைப் பிற்படுத்தினார்கள். நாங்கள் பள்ளியிலேயே உறங்கியப் பின்னர் விழித்து பின்னர் உறங்கியப் பின்னர் விழித்தோம். பிறகு எங்களிடம் நபி (ஸல்) அவர்கள் வந்து உங்களைத் தவிர பூமியில் உள்ளவர்களில் வேறு எவரும் இத்தொழுகைக்காக காத்திருக்கவில்லை என்றார்கள்.

புஹாரி570: இப்னு உமர் (ரலி)

374- ஹுமைத் இத்தவீல்(ரஹ்) அவர்கள் அறிவித்தார். அனஸ் (ரலி) அவர்களிடம், 'நபி (ஸல்) அவர்கள் மோதிரம் எதையேனும் தயாரித்(து அணிந்)திருந்தார்களா?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், 'நபி (ஸல்) அவர்கள் ஓர் இரவில் இஷாத் தொழுகையைப் பாதி இரவு வரை தாமதப்படுத்தினார்கள். (பின்னர் தொழுகை நடத்தினார்கள்.) பிறகு அவர்கள் எங்களை நோக்கித் திரும்பினார்கள். இப்போதும் நான் அவர்களின் (கல்) மோதிரம் மின்னுவதைப் பார்ப்பது போன்றுள்ளது. அப்போது நபி (ஸல்) அவர்கள், 'மக்கள் தொழுதுவிட்டு உறங்கிவிட்டார்கள். (ஆனால், நீங்கள் இவ்வளவு நேரம் காத்திருந்து தொழுதிருக்கிறீர்கள்.) நீங்கள் ஒரு தொழுகையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் வரை அந்தத் தொழுகையிலேயே உள்ளீர்கள் (அது வரை அதன் நன்மை உங்களுக்குக் கிடைத்துக் கொண்டேயிருக்கும்)" என்றார்கள்.

புஹாரி:5869 ஹுமைத் (ரலி)

375- நானும் என்னுடன் கப்பலில் வந்த என் தோழர்களும் புத்ஹான் எனும் தோட்டத்தில் தங்கினோம். நபி (ஸல்) அவர்கள் மதீனாவில் இருந்தனர். ஒவ்வொரு இரவும் இஷாத் தொழுகைக்கு எங்களில் ஒரு (சிறு) கூட்டத்தினர் முறை வந்து நபி (ஸல்) அவர்களிடம் செல்பவர்களாக இருந்தோம். நானும் என் தோழர்களும் (எங்கள் முறையின் போது) நபி (ஸல்) அவர்களை சந்தித்தோம். அவர்கள் தமது காரியத்தில் ஈடுபட்டு இருந்ததால் நள்ளிரவு நேரம் வரை

இஷாவைத் தாமதப்படுத்தினார்கள். பின்னர் புறப்பட்டு வந்து மக்களுக்குத் தொழுவித்தனர். தொழுது முடித்ததும் வந்திருந்தோரை நோக்கி அப்படியே இருங்கள்! நற்செய்திப் பெற்றுக் கொள்ளுங்கள்! இந்த நேரத்தில் உங்களைத் தவிர வேறு எவரும் தொழவில்லை. இது அல்லாஹ் உங்களுக்குச் செய்த அருட்கொடைகளில் ஒன்றாகும் என குறிப்பிட்டார்கள். நபி (ஸல்) அவர்களிடமிருந்து இதைக் கேட்டதனால் நாங்கள் மகிழ்வுற்றோம்.

புஹாரி567: அபூ மூஸா (ரலி)

376- நபி (ஸல்) அவர்கள் ஒரு இரவு இஷாவை தாமதப் படுத்தினார்கள். மக்கள் எல்லாம் உறங்குவதும் விழிப்பதும், மீண்டும் உறங்குவதும் விழிப்பதுமாக இருந்தனர். அப்போது உமர் (ரலி) எழுந்து தொழுகை எனக் கூறினார்கள். உடன் நபி (ஸல்) அவர்கள் தலையிலிருந்து நீர் சொட்டத் தம் கையை தலையில் வைத்தவர்களாகப் புறப்பட்டதை இன்று பார்ப்பது போல் உள்ளது. என் சமுதாயத்திற்கு சிரமமாகாது என்றால் அவர்களை இந்த நேரத்தில் தொழுமாறு கட்டளையிட்டு இருப்பேன் என்று அப்போது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் எவ்வாறு தம் கைகளை தலையில் வைத்தார்கள் என்று நான் அதா அவர்களிடம் விளக்கம் கேட்டபோது அவர்கள் தம் விரல்களை சற்று விரித்து, விரல்களின் முனைகளைத் தலை உச்சியில் வைத்து அவர்களின் பெரு விரல், காது ஓரங்கள், நெற்றிப் பொட்டு, தாடியின் ஓரங்கள் ஆகியவற்றில் படுமாறு அழுத்தித் தடவி, இப்னு அப்பாஸ்(ரலி) செய்து காட்டியது போல் செய்து காட்டினார்கள் என்று இப்னு ஜுரைஜ் குறிப்பிடுகிறார்.

புஹாரி571: அப்பாஸ்(ரலி)

## 218.ஸுப்ஹு தொழுகையின் நேரம்.

377- மூமினான பெண்கள் தங்களின் ஆடைகளால் போர்த்திக் கொண்டு நபி(ஸல்) அவர்களுடன் ஃபஜ்ருத் தொழுகையில் பங்கெடுப்பவர்களாக இருந்தனர். தொழுகை முடிந்ததும் தங்களின் இல்லங்களுக்குத் திரும்புவார்கள். இருட்டின் காரணமாக அவர்களை ஒருவரும் அறிந்து கொள்ள முடியாது.

புஹாரி578: ஆயிஷா(ரலி)

378- நபி (ஸல்) அவர்கள் நண்பகலில் லுஹர் தொழுவார்கள். சூரியன் தெளிவாக இருக்கும் போது அஸர் தொழுவார்கள். சூரியன் மறைந்ததும் மஃரிப்

தொழுவார்கள். இஷாவை சில நேரம் முன்னேரத்திலும் சில நேரம் பின்னேரத்திலும் தொழுவார்கள். அதாவது மக்கள் ஒன்று சேர்ந்து விட்டால் முற்படுத்துவார்கள். மக்கள் வருவதற்குத் தாமதமானால் தாமதப்படுத்துவார்கள். ஸுப்ஹைக் காலை வெளிச்சம் வருவதற்கு முன்னால் தொழுபவர்களாக இருந்தனர்.

புஹாரி560:ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)

379- நானும் எனது தந்தையும் அபூ பர்ஸா (ரலி)யிடம் சென்றோம். கடமையான தொழுகைகளை நபி (ஸல்) அவர்கள் எவ்வாறு தொழுவார்கள். என்று கேட்டோம். நீங்கள் முதல் தொழுகை என்று கூறக் கூடிய நண்பகல் தொழுகையை (நடுவானிலிருந்து) சூரியன் சாயும்போது நபி (ஸல்) அவர்கள் தொழுவார்கள். (பின்னர்) அஸர் தொழுவார்கள். எங்களில் ஒருவர் (அஸர் தொழுது விட்டு) மதீனாவின் கடைக்கோடியில் உள்ள தமது இடத்திற்குத் திரும்பும்போது சூரியன் உயிருடன் (ஒளிக் குன்றாமல்) இருந்து கொண்டிருக்கும் என்றார்கள். மஃரிப் பற்றி அபூ பர்ஸா (ரலி) கூறியதை நான் மறந்து விட்டேன். கடைசித் தொழுகை என்று நீங்கள் குறிப்பிடக்கூடிய இஷாவைப் பிற்படுத்துவதை நபி (ஸல்) அவர்கள் விரும்புபவர்களாக இருந்தனர். இஷாவுக்கு முன் உறங்குவதையும் , இஷாவுக்குபின் பேசிக் கொண்டிருப்பதை நபி (ஸல்) அவர்கள் வெறுப்பவர்களாக இருந்தனர். அறுபது முதல் நூறு வசனங்கள் வரை ஓதி வைகறைத் தொழுகையைத் தொழுது முடிக்கும் போது ஒருவர் தம் அருகில் அமர்ந்திருப்பவரை அறிந்து கொள்ள முடியும் என அபூ பர்ஸா (ரலி) கூறினார்கள்.

புஹாரி771: ஸய்யார் பின் ஸலாமா (ரலி)

## 219.தொழுகைகளை ஜமாஅத்தாக தொழுவதின் அவசியம்..

380- ஒருவர் தனியாக தொழுவதை விடக் கூட்டாகத் தொழுவது இருபத்தைந்து மடங்கு சிறப்புடையதாகும். ஸுப்ஹுத் தொழுகையின் போது பகல்நேர மலக்குகளும் இரவுநேர மலக்குகளும் ஒன்று சேருகிறார்கள். இதை அபூஹுரைரா (ரலி) அறிவித்து விட்டு, நீங்கள் விரும்பினால் நிச்சயமாக ஸுப்ஹு நேரத்தில் ஓதப்படும் குர்ஆன் சாட்சி கூறக்கூடியதாக இருக்கிறது (17:78) என்ற வசனத்தை ஓதுங்கள் என்றார்கள்.

புஹாரி648: அபூஹுரைரா (ரலி)

